REGD. No. TN MS (C) 244 ✻ ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 ✻ 4 பக்கம் விலை 30 காசு



ஜாதி முறை

சமுதாய பிற்போக்கிற்கும் தொழில் மந்தத்திற்கும் ஜாதி முறை பிரதான காரணமாயிருக்கிறது. ஜாதிக் கொள்கையில் ஒருவித கேவலமான இறுமாப்பு இருக்கிறது.

– பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்.

வழிபாடு

ஒழுக்கமாய் நடப்பது, உயர்ந்த பண்புகள் கொள்வது இதுவே உண்மையான கடவுள் வழிபாடு.

–தந்தை பெரியார்



● மலர்: 3 (●) சென்னை 5—1—1979 வெள்ளி (★)✻●✻(★) (★)✻●✻(★) (★)✻●✻(★) வேலூர் 6—1—1979 சனி (●) இதழ்: 80 ●

## பெருமழை - நிலச்சரிவினுல் பாதிக்கப்பட்ட நீலகிரி வாழ் மக்களிடையே புரட்சித்தலைவர்

# நெஞ்சைநெகிழ வைத்த காட்சி

**ஊட்டி, ஜன. 5- பெருமழையாலும், நிலச்சரிவினுலும் பெருந்துயருக்கு ஆளான நீலகிரி மாவட்ட மக்களை நேரில் சந்தித்து முதல்வர் புரட்சித்தலைவர் ஆறுதல் கூறினர். பாதிக்கப்பட்ட மக்கள் வாழும் பகுதியில் வீடுவீடாக முதல்வர் சென்று நிவாரணப்பணிகள் குறித்து அவர்களிடம் விசாரித்தார்.**

பிப்ரவரி மாதம் 28 ஆம் தேதிக்குள் ஊட்டி நகரத்தில் 8லட்ச ரூபாய்செலவில் சாலைகள் அமைக்க அதிகாரிகளுக்கு புரட்சித்தலைவர் உத்தரவிட்டார்.

சொந்தமாக தொழில் செய்ய பெண்களுக்கு வசதி செய்து கொடுக்குமாறு அமைச்சர் பி டி சரஸ்வதியிடம் முதல்வர் கூறினர்.

முதல்வர் புரட்சித் தலைவரின் நீலகிரி மாவட்ட நிகழ்ச்சிகள் நெஞ்சை நெகிழ வைப்பதாக அமைந்தன பகலவனைக் கண்டதும் நீங்குகிற பனி போல முதல்வர் புரட்சித் தலைவரைக் கண்டதும் தங்கள் கவலைகளையெல்லாம் நீலகிரிவாழ் மக்கள் மறந்தனர்.

முதல்வர் புரட்சித்தலைவருடன் சமூக நலத்துறை அமைச்சர் பி டி சரஸ்வதி சட்டமன்ற உறுப்பினர் டாக்டர் பொன்னுசாமி பேரூர் சண்முகசுந்தரம், ஊட்டி கோபால், டாக்டர் ஜனார்த்தனம், நீலகிரி மாவட்ட ஆட்சித்தலைவர் தர்மராஜ் மற்றும அதிகாரிகள் சுற்றுப்பயணத்தில் கலந்து கொண்டனர்.

நீலகிரி மாவட்டத்தில் புரட்சித் தலைவர் இன்றும் சுற்றுப்பயணம் செய்கிறார். கூடலூர்பகுதியில் புரட்சித் தலைவர் இன்று சுற்றுப்பயணம் செய்து நிவாரணப் பணிகளை தீவிரப்படுத்துகிறார்.

ஊட்டி நகரில் வெள்ளத்தால் பெரிதும் பாதிக்கப்பட்ட க்ரீன்பீல்டு வால் சேம்பர் ஆகிய பகுதிகளில் 400 வீடுகள் இருக்கின்றன. இந்த வீடுகள் அனைத்தையும் முதல்வர் புரட்சித் தலைவர் பார்வையிட்டார்.

ஐம்பதுக்கும் மேற்பட்ட வீடுகளுக்குள்ளே முதல்வர் நுழைந்துவீட்டின் நிலைமையைப் பார்த்தார். வீட்டில் உள்ளவர்களின் நலனை விசாரித்தார். நிவாரணப்பணிகள் சரியாக நடைபெற்றனவா என்று அவர்களிடம் விசாரித்து முதல்வர் அறிந்து கொண்டார்.

சின்னச்சின்ன சந்துகளுக்கெல்லாம் கால் நடையாக நடந்து சென்று சாலைகள், வீடுகள் நிலைமையை முதல்வர் புரட்சித் தலைவர் பார்வையிட்டார்.

''க்ரீன் பீல்டு'', ''வால் சேம்பர் இரு பகுதிகளுமே நவம்பர், டிசம்பர் ஆகிய இரு மாதங்களிலும் வெள்ளத்தால் மிகவும் மோசமாக பாதிக்கப்பட்ட பகுதிகள் ஆகும்.

### இருளில் ஒளி

மரத்தாலான ஒரு வீட்டினுள் பகலிலும கும்மிருட்டாக இருந்தது டார்ச்லைட் கொண்டு வரச்செய்து வீட்டிற்குள் சென்று புரட்சித்தலைவர் பார்வையிட்டார்.

அந்த வீட்டிற்குள்ளே ஒரு குழாயில் நிற்காமல் தண்ணீர் ஊற்றிக்கொண்டு இருந்தது அதைஏன் பழுது பார்க்கவில்லை என்று கடிந்து கொண்ட முதல்வர் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுக்குமாறு பணித்தார்.

### கண்ணீர்க் கதை

கூடியிருந்தவர்கள் கண்களை எல்லாம் குளமாக்கிய ஒரு ஊமைப் பெண்ணின் சோகக் கதையை முதல்வர் புரட்சித்தலைவர் கேட்டறிந்தார்.

பதினைந்து வயது நிரம்பிய அந்த ஊமைப் பெண் தன் சோகக் கதையை ஜாடையாலேயே முதல்வரிடம் விளக்கினள்.

தன் தந்தையார் இறந்து போய் விட்டதாகவும், தாயாரும் உடன் பிறந்தவர்களும் மிகவும் கஷ்டப் படுவதாகவும அந்தப்பெண் புரட்சித் தலைவரிடம் விளக்கினள் அவளது குடும்பத்தாருக்கு வேலை வாய்ப்பு அளிக்குமாறு கேட்டுக் கொண்ட முதல்வர் அப் பெண்ணுக்கு தம் கையில் இருந்து நூறு ரூபாய் கொடுத்தார்.

### உடனடி சாலை வசதி

நிலச்சரிவாலும், வெள்ளத்தாலும ஊட்டி நகரில் சாலைகள் பழுது பட்டு இருக்கிறது. அதை பழுது பார்க்க ஏன் காலதாமதம் ஆகிறது என்று அதிகாரிகளிடம் கேட்டார்.

டெண்டர் விடுவதில் காலதாமதம் ஆவதாக அதிகாரிகள் தெரிவித்தனர்

அரசே நேரடியாக சாலை வசதியை செய்ய முதல்வர் உத்தரவிட்டதுடன் பிப்ரவரி மாதம் 28-ஆம் தேதிக்குள் சாலைகளை சரி செய்யுமாறு உத்தரவிட்டார்.

முதல்வரின் உத்தரவால் எட்டு லட்ச ரூபாய் செலவில் பிப்ரவரி மாதம் 28ம் தேதிக்குள் ஊட்டி சாலை வசதி பெறுகிறது.

பெண்கள் கூட்டமாக வந்து முதல்வரிடம் தங்களது கோரிக்கை மனுக்களைக் கொடுத்தனர் தங்களுக்கு வேலை வாய்ப்பு வேண்டும் என்று அவர்கள் புரட்சித்தலைவரிடம் கோரினர்கள்.

அப்பெண்கள் சொந்தமாக தொழில் செய்து கொள்ள வகதி செய்து கொடுக்குமாறு சமூக நல அமைச்சர் பி.டி சரஸ்வதியிடம் முதல்வர் கேட்டுக் கொண்டார்.

### நிரந்தர பாதுகாப்பு

''க்ரீன்பீல்டு'' பகுதியில் உள்ள வீடுகளுக்கு நிரந்தர பாதுகாப்பு ஏற்பாடுகளை செய்து தருமாறு கலெக்ட

(2ம் பக்கம் பார்க்க)



## பிப்ரவரி 9ல் சட்டசபை கூட்டம்

சென்னை, ஜன. 5- தமிழ் நாடு சட்டசபை கூட்டத்தை பிப்ரவரி 9ந் தேதி (வெள்ளிக்கிழமை) காலை 11 மணிக்கு ஆளுநர்பிரபுதாஸ் பட்வாரி கூட்டியுள்ளார் சட்டசபை, மேலவை, ஆகியவற்றின் கூட்டுக் கூட்டத்தில் அன்றைய தினம் ஆளுநர் உரை நிகழ்த்துவார்.

அடுத்த நாள் 10ந் தேதி விடுமுறை. 12ந்தேதிமுதல் கூட்டம் தொடர்ந்து நடக்கும்.

## கழகப் பொதுக்குழு தலைமைச் செயற்குழு

### 1979 ஜனவரி 24, 25 புதன் - வியாழன் நாட்களில் கோவையில நடைபெறும்

**தலைமைக்கழக அறிக்கை; எண் 4-79,5-1-79**

1979 ஜனவரி 24, 25 நாட்களில் கோவையில் மாநில மாணவர் கழகத்தின் சார்பாக இந்தித்திணிப்பு எதிர்ப்பு மாநாடும் வீரவணக்க நாள் சிறப்பு மாநாடும் நடைபெற இருப்பதாலும், கழகப்பொதுக்குழுதலைமை செயற்குழுக் கூட்டங்களை அந்த நாட்களில் கோவையிலேயே நடத்த வேண்டும் என்று மாணவ அமைப்பினர் வேண்டுகோள் விடுத்திருப்பதாலும், பொதுக்குழு உறுப்பினர்கள் அனைவரும் மாநாட்டில் கலந்து கொள்ள வாய்ப்பு தரவேண்டியிருப்பதாலும் பொதுக்குழு தலைமைச்செயற்குழுக் கூட்டங்களை கோவையில் ஜனவரி 24, 25 நாட்களில் நடத்த தலைமைக் கழகம் முடிவு செய்துள்ளது.

புரட்சித்தலைவர் அவர்கள் பொதுக்குழு செயற்குழுக் கூட்டங்களிலும் மாநில மாணவர் கழக மாநாட்டிலும் கலந்து கொள்கிறார்கள்

தலைமைச் செயற்குழுக் கூட்டம் 24-1-79 அன்று காலை 10 மணி அளவிலும், பொதுக்குழு கூட்டம் அன்று மாலை 4 மணி அளவிலும் மீண்டும 25-1-79 அன்று காலை 9 மணி அளவிலும் கூடும்.

பொதுக்குழு-தலைமைச் செயற்குழுக் கூட்டங்கள் நடைபெறும் இடம் பின்னர் அறிவிக்கப்படும்.

**இரா. நெடுஞ்செழியன்**
பொதுச்செயலாளர்-பொறுப்பு

சென்னை-14
5-1-79



சிவகாசி அருகே நடந்த கோர பஸ் விபத்தில் உயிர் தப்பிய சிறுவன் விபத்து எப்படி நடந்தது என்பதை உள்ளாட்சித்துறை அமைச்சர் காளிமுத்துவிடம் கண்களில் நீர்வழிய விவரிக்கிறான்.

## கமலஹாசன், லதா, எஸ். பி. முத்துராமன் பஞ்சு அருணசலம், உள்பட 37 கலைஞர்கட்கு

# கலைமாமணி விருது

### சென்னையில் 26-ந் தேதி விழா

**சென்னை, ஜன. 5- கமலஹாசன், எஸ் பி முத்துராமன், பஞ்சு அருணசலம், லதா, சுசீலா உட்பட 37 கலைஞர்களுக்கு கலைமாமணி விருது வழங்கப்படுகிறது விழா சென்னை கலைவாணர் அரங்கில் இம்மாதம் 26ந் தேதி நடக்கிறது**

தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றம் ஆண்டு தோறும் சிறந்த கலைஞர்களைத் தேர்ந்தெடுத்து 'கலைமாமணி' விருது வழங்கி வருவது தெரிந்ததே

இந்த ஆண்டில் மொத்தம் 37 கலைஞர்களுக்கு கலைமாமணி விருது வழங்கப்படுகிறது இதற்கான விழா சென்னை கலைவாணர் அரங்கில் ஜனவ்ரி மாதம் 26ந் தேதி நடக்கிறது

விழாவில் ஏற்கனவே விருது பெற்றவர்கள் 12 பேருக்கு பொற்கிழி வழங்கப்படுகிறது. மறைந்த கலை மேதைகளின் படத் திறப்பு விழாவும் இணைந்து நடக்கிறது.

### தெ. பொ. மீ

கலைமாமணி விருது பெறும் கலைஞர்கள் வருமாறு :-

தெ. பொ. மீனுட்சி சுந்தரனர் -இயற்றமிழ்க் கலைஞா, திருமதி பி, ஆர். திலகம் -இசை, லால்குடி ஜெயராமன் -வயலின், ஸ்ரீராமுலு - மிருதங்கம், ரங்கநாயகி ராஜகோபாலன் -வீணை.

டி விஸ்வநாதன் புல்லாங்குழல்), திருவீழிமிழலை டி கோவிந்தராஜ பிள்ளை (நாதஸ்வரம்), திருவீழிமிழலை டி தட்சிணமூர்த்தி பிள்ளை (நாதஸ்வரம்), என் கே ராஜம் பிள்ளை (நாதஸ்வர ஆசிரியர்), தேன்கனிக் கோட்டை முனிரத்தினம் (தவில்), தஞ்சை ராதசுப்ரமணிய சாமா (ஹரிகதா காலட்சேபம்) சைதைநடராஜன் (அருட்பா இசை) பந்தநல்லூர் டி கே ஜெயலெக்ஷ்மி (பரதநாட்டியம்) பந்தநல்லூர் சுப்பராய பிள்ளை (பரதநாட்டியம்)

மெலட்டூர் நடராஜன் (பாகவத மேளா நாட்டியம்) டி கே சம்பங்கி (நாடக நடிகர்) ஷோபா (நாடக நடிகை) ராஜா தண்டபாணி (பழம்பெரும் நாடக நடிகர்) சி டி ராஜகாந்தம் (பழம் பெரும நாடக நடிகை)

சுகிசுப்பிரமணியம் நாடக ஆசிரியர், டி எம் ராஜநாயகம் நாடகத் தயாரிப்பாளர், தஞ்சை பாலு நாடகப் பாடலாசிரியர், டெல்லிகுமார் தொழில் துறையல்லாத நாடக நடிகர்

எஸ். எஸ். சாப்ஜான் இசைநாடகநடிகர், டி. ஏ. சுந்தரலட்சுமி(இசைநாடக நடிகை) பேச்சி முத்துப்பிள்ளை இசை நாடகமிருதங்கம், கிளவுன் சுந்தரம் இசை நாடகப் பாடலாசிரியர், கமலஹாசன், (திரைப்படநடிகர் செல்விலதா ]திரைப்பட நடிகை] குகநாதன் [வசன கர்த்தா] எஸ். பி. முத்துராமன் [டைரக்டர்] சங்கர் கணேஷ் [இசை அமைப்பாளர்கள்] சுசீலா பின்னணி பாடகி] ஜி என் வேலுமணி (தயாரிப்பாளர்) பஞ்சு அருணசலம் (பாடலாசிரியர்) தஞ்சை யாபு (புரவி நாட்டியம்)

கும்பகோணம் வாணி விலாச சபாவுக்கு கேடயம் வழங்கப்படுகிறது

### பொற்கிழி

கீழ்க்கண்ட கலைஞர்களுக்கு பொற்கிழி வழங்கப்படுகிறது.

இவர்கள் ஏற்கனவே கலைமாமணி விருது பெற்றவர்கள்.

சாட்டியக்குடி மீனட்சி சுந்தரம் மாள் (இசை), திருநகரி நடேசம் பிள்ளை (தவில்), கும்பகோணம் தங்கவேலுப்பிள்ளை தவில் கோட்டை திருக்கோகாணம் ரங்கநாயகி (மிருதங்கம்), தஞ்சை ஆண்டாள் அம்மாள் (பரதநாட்டியம்)

சீரங்கம் செட்டியார் கரக ஆட்டம் வீரநாதன் கோனர் நாடகம், புரிசை தங்கவேல் தெருக்கூத்து, சின்ன பொன்னுசாமி நாடகத் தயாரிப்பாளர், விசி மாரியப்பன் நாடக நடிகர், சிவிவி பந்துலு பழம் பெரும் நாடகநடிகர் விஎஸ் நடேசன்நாடகநடிகர்

விழாவில் கீழ்க்கண்ட மறைந்த மாமேதைகளின் படங்களும் திறக்கப்

(2-ம்பக்கம் பார்க்க)

**ப. உ. ச.**
## சிறுகதை
2ம் பக்கம்

### இன்று மாலை

சென்னை டாக்டர் ராதாகிருஷ்ணன்நகர் முத்தையாமுதலிதெருவில்

**நாவலர்**
பேசுகிறார்

### வெள்ள பாதிப்பு மக்களுக்கு

# 50 கிலோ அரிசி வழங்கிய இடங்கள் - விவரம்

### புரட்சித்தலைவர் அறிவிப்பு

**வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு குடும்பத்துக்கு 50 கிலோ அரிசி மற்றும் வேட்டி துணிகள் வழங்கப்பட்ட இடங்கள் பற்றிய விவரத்தை முதல்வர் புரட்சித் தலைவர் அறிவித்துள்ளார்.**

புரட்சித்தலைவர் அறிவிப்பு வருமாறு :

வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட குடும்பங்களுக்கும் வீடு இழந்தவர்களுக்கும் குடும்பம் ஒன்றுக்கு 50 கிலோ அரிசியும புதிய வேட்டி சேலையும் வீடு பாதிக்கப் பட்டவர்களுக்கு நூறுரூபாயும்வழங்கஏற்பாடு செய்யப் பட்டுள்ளது. தமிழகத்தில் முதன் முறையாகதற்போது தான்வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட குடும்பங்களுக்கு50 கிலோ அரிசி வழங்கப்படுகிறது.

சென்னையில் அரிசி வழங்கப்பட்ட வட்டங்கள்.

மயிலாப்பூர் வட்டம்: தெற்கு கேசவபெருமாள் புரம்.

திருவல்லிக்கேணி வட்டம்: மல்லிகைப்பூ நகர்.

இந்த இரு வட்டங்களுக்கும் 397 மூட்டை அரிசி வழங்கப்பட்டுள்ளது.

பெரம்பூர் வட்டம் தாகூர்நகர் 86 மூட்டை அரிசி வழங்கப்பட்டது.

புரசைவாக்கம் வட்டத்தில் வள்ளுவப்பண்டாரம் தெரு 42 மூட்டை அரிசி வழங்கப்பட்டது.

கோட்டை வட்டம்: ஒய் எம்சி ஏ குப்பம்: 176 மூட்டை

தண்டையார்பேட்டை வட்டம் ராமதாஸ் நகர் 74 மூட்டை வழங்கப்பட்டது

மாம்பலம் வட்டம் நாகிரெட்டி தோட்டம் 86 மூட்டை வழங்கப்பட்டது

கிண்டி வட்டம் ராமகாமத்புரம் 107 மூட்டை அரிசி வழங்கப்பட்டது.

எழும்பூர் வட்டம் கதிரவன் காலனி 102 மூட்டை வழங்கப்பட்டது.

நுங்கம்பாக்கம் வட்டம் மக்கீஸ் தோட்டம் ஆயிரம் விளக்கு 71 மூட்டை அரிசி வழங்கப்பட்டது.

இன்று (வெள்ளிக்கிழமை) சென்னை நகரில் பாதிக்கப்பட்ட பத்து பகுதிகளில் தமிழக அமைச்சர்கள் உடை, அரிசி, பணம வழங்கினர்கள்.

மின்சாரத்துறை அமைச்சர் எஸ். ராமச்சந்திரன் ராமகாமத்புரத்தில் வழங்கினர்.

கூட்டுறவுத்துறை அமைச்சர் கே. ஏ. கிருஷ்ணசாமி தாகூர்நகரில் வழங்கினர்.

வருவாய்த்துறை அமைச்சர் எஸ். டி. சோமசுந்தரம் மக்கீஸ் கார்டனில் வழங்கினர்.

போக்குவரத்துத் துறை அமைச்சர் பொன்னையன் ஒய். எம். சி. ஏ. குப்பம் (ராயபுரம்)

கல்வி அமைச்சர் அரங்கநாயகம்-கதிரவன் காலனி (அண்ணா நகர்)

கைத்தறித்துறை அமைச்சர் திருமதி சுப்புலட்சுமி ஜெகதீசன்- மல்லிகைப்பூ நகர்.

அரிசன நலத்துறை அமைச்சர் பெ. சவுந்தரபாண்டியன் நாகிரெட்டித் தோட்டம்.

கிராம தொழில் அமைச்சர் கே. ராஜாமுகமது வள்ளுவ பண்டாரம் தெரு, எழும்பூர்

கைத்தறித்துறை அமைச்சர் திருமதி சுப்புலட்சுமி ஜெகதீசன் தெற்கு கேசவபெருமாள் புரம் மயிலை

இவ்வாறு முதல்வர் புரட்சித் தலைவர் அறிவித்துள்ளார்.

ஒரு குறள் சிறு கதை

# பொருளும் பகையும்



"எவ்வளவு பொருள் செலவானாலும் பரவாயில்லை. அந்த நரித்தலையனின் பகையை நான் பெற்றாக வேண்டும். அப்படிப் பெறுவதுதான் எனக்கு மட்டற்ற மகிழ்ச்சியூட்டுவதாகும்."

அருகிலிருந்த புலவரிடம் "குவளையூர் அதிபதி" கூறியிட்டார்.

அதுகேட்டதும் புலவர் திகைத்தார். பிறகு நகைத்தார். அட்டியின்றி பதி கொடுத்தும் குணம் மாறா "குவளையூர அதிபதி" அது கண்டு சிறிது சினம் கொண்டான்.

"புலவரே, உம் நகைப்பின் பொருள்?" என்று சீறினன்.

"குவளையூராரே, தங்களின், பட்டம் கொடுத்தும் பொங்கியும், மட்டற்ற மகிழ்ச்சி பெற வையானதுடிக்கும் வழி வகைகளையும் நினைத்தேன். நகைத்தேன். அதிருக்கட்டும். 'நரித்தலையன்' என்று தாங்கள் சாடுவது யாரை?"

"இதுகூடவா உங்களுக்குப் புரிய வில்லை? நேற்றுவரை என்னுடு இருந்து இன்று என் எதிரியோடு இணைந்து விட்டானே 'மலையூரான்' அவனைத்தான் குறிப்பிட்டேன்."

"மலையூராரையா? தங்கள் 'நிழல்' என்று நான் கருதினேனே - அவரையா? நீங்கள் சோகத்தில் மூழ்கியபோதெல்லாம் உங்கள் சோர்வைப் போக்கிட உற்சாகம் ஊட்டிட உழைத்தாரே, அவரையா நரித்தலையன் என்றீர்?"

"அவனைப்பற்றி நீங்கள் அறிந்ததைவிட நானறிவேன். நரிக்குணம் கொண்டோன். அவனை நீங்கள் புரிந்துகொள்ளவில்லை. நான் புரிந்து கொண்டேன். பாம்பின் கால் பாம்பறியும், புலவரே பாம்பறியும்"

"ஆமாம், பாம்பின் கால் பாம்பிற்குத்தானே தெரியும்! அவர் பகையைப் பெறவா 'எவ்வளவு பொருள் செலவானாலும் பரவாயில்லை' என்றீர்?"

"ஆமாம் புலவரே ஆமாம். அது மட்டுமல்ல, அப்படிப்பெறும் பகைதான் எனக்கு மட்டற்ற மகிழ்ச்சியூட்டும்".

"அதாவது ..., எவ்வளவு பொருள் செலவானாலும் செலவு செய்து பெரும் பகை..."

"சரியாகச்சொன்னீர். புலவர் என்றால் புலவர் தான்."

"எவ்வளவு பொருள் செலவானாலும் பரவாயில்லை என்பதைப் பார்த்தால் நிறைய பொருள் சேர்த்து வைத்திருக்கிறீா என்பது உண்மை போலிருக்கிறதே."

"கையூட்டு வாங்கிய பொருள் அல்ல. கைம்மாறுப் பெற்றது லஞ்சத்தை வெறுத்தேனேயொழிய அன்பளிப்பை மறுத்தேனில்லை. இதைத் தாங்கள் அறியீரோ?"

"அறிவேன், அறிவேன். மேலான தங்கள் குணத்தை மேதினியோர் அனைவரும் அறிவர். ஆனல்..."

"என்ன புலவரே, ஆனல்?"

"பொருளைச் செலவழித்துப் பகையைப் பெறுவதெப்படி?"

"அப்படிச்சொல்லும். அவன்பகை விலை மதிக்க முடியாதது அல்ல! நானும் விலை கொடுத்துவாங்கமுடியாத தல்லவ! எதை எதையோ வாங்கியிருக்கும் எனக்கு இது எம்மாத்திரம்? வாரி வீசினல்..."

"தங்களிடம் இல்லாத பொருளா? பஞ்சைப் புலவன் 'பாரி' எனப்பாடுவதா? பொருள்-அதுஇதுதரும் இன்பசுகந்தரும் பழந்தரும்- பெருமை தரும்- இணையிலா இன்பந்தரும்-- ஆனல்..."

"மீண்டும், 'ஆனலா?'"

"பொருளின் பலத்தைத் தங்களோடு பழகிய நான் அறியாதவன் அல்ல. அது பிறரின் உயிரையும் பறிக்கும். பிறர்க்கு உரிய புகழையும் அழிக்கும் ஆனல்..."

"இவ்வளவுந் தெரிந்த பின்னுமா... ஆனல்"

"எவ்வளவு பொருள் செலவானாலும் பரவாயில்லை. அவன் பகையைப் பெற்றாக வேண்டும். அப்படிப் பெறுவது தான் தங்கட்கு, மட்டற்ற மகிழ்ச்சி யூட்டும்"

"ஆமாம்"

"பொருளைச் செலவழித்துப் பகையைப் பெறவேண்டும்... அதில் மகிழ்ச்சியுறவேண்டும்... விந்தையான மனிதர் தாங்கள்"

"மகிழ்ச்சிக்காக உங்கள் கை தாராளமாக விளையாடும். தங்கள் திருவிளையாடல் ஒன்ற இரண்டா?... அதற்காகச் செலவழித்த பொருள் என்ன குறைவா? கதிரவன் கூறக் கேட்டிருக்கிறேன். இருப்பினும் இன்று உங்கட்குத் தோன்றியுள்ள அர்த்தமற்ற ஆசைக்காக அனுதாபப்படுகிறன்."

"புலவரே!" என்று சீறி எழுந்தார் குவளையூர் அதிபதியார.

புலவரின் ஏளனப் புன்னகை அதிபதியாரின் எச்சலை அடக்கியது.

"புலவரே நீங்கள் என்னை அவமதிக்க வில்லை வள்ளுவரை இழிவு படுத்துகிறீர்."

"நானு? வள்ளுவரையா?"

"'கொடுத்தும் கொளல்வேண்டும் மன்ற அடுத்திருந்து மாணாத செய்வான் பகை' என்ற குறளுக்குப் பொருள் தெரியுமா?" புலவர் உரத்த குரலில் சிரித்தார். குவளையாரோ கடுங்கோபம் கொண்டார்.

"இந்தக் குறளா உங்களை இந்தப் பாடுபடுத்தியது?" என்றார் புலவர்.

"இந்தக் குறளுக்குப் பரிமேலழகர் என்ன பொருள் கொண்டார் தெரியுமா?" என்றார் குவளையார்.

"சொல்லுங்கள் கேட்போம்"

## ப. உ. ச.

"'தன்னை அடுத்திருந்தவாறு தனக்கு மாறான காரியங்களைச் செய்பவனுடைய பகையை பொருள் கொடுத்தாவதுவாங்க வேண்டும்' என்று கூறியுள்ளார" என்றார் குவளையார்.

"குவளையாரே! அருள் கூர்ந்து பரிமேலழகர் கூறியதைத் திரித்துக் கூறுகிறீர், 'கொடுத்து' எனும் சொல்லிற்கு, சில பொருள் அழியக்கொடுத்து' என்கின்றார.

மணக்குடவர், 'துணிந்து ஒன்றனைக் கொடுத்து' என்கின்றார்.

காளிங்கர் 'தமக்குச் சிறந்தது யாதானுங் கொடுத்து' என்கின்றார்.

மு. வ. 'பொருள் கொடுத்தாவது' என்கின்றார்.

ஆனல் தாங்களோ 'எவ்வளவு பொருள் செலவழித்தாயினும்' என்கின்றீர்" என்றார் புலவா.

"நான் கொண்ட பொருளில் என்ன பெரிய வித்தியாசம் கண்டீர்?" என்றார் குவளையார்.

"'கொடுத்தும் கொளல் வேண்டும் பகை- யாருடைய பகை என்பதிருக்கட்டும்- இந்தக் குறளில் 'எவ்வளவு பொருள் செலவழித்தாகிலும் பரவாயில்லை, பகைகொள்' என்றோ அப்படிப் பெரும் பகையால் மட்டற்ற மகிழ்ச்சியடை' என்றோ இல்லை. ஆழ்ந்து பார்த்தால் புரியும்.

நண்பர்களையும்பகைவர்களாக்கும்சக்தி பொருளுக்கு உண்டு. அத்தகைய பொருளைக் கொடுத்தாயினும் உடனிருந்து மாறான காரியங்கள் செய்வோரின் பகையைக் கொள்'என்று பொருள்"

"கேவலம் ஒரு பஞ்சைப் புலவனா என்னை மறுப்பது" என்று கொதித்தெழுந்தார் குவளையார்.

"குவளையூராரே! கேளும் நான் மட்டும் பஞ்சையல்ல, இது காறும் குறளுக்குப் பொருள் உரைத்தோர் அனைவரும் பஞ்சைகள் தான். அதனல்தான் துணிந்து ஒன்றினைக் கொடுத்து என்றனர். தாங்களோ, எவ்வளவு செலவழித்தாயினும் பகைகொள்ளத் துடிக்கின்றீர் குற்றம் உம்முடைய தல்ல வீராணத்தாரும், மருந்தூராரும் வழங்கிய அன்பளிப்புகள் மலை போல்குவிந்துள்ளதால்தான உம்மை மறுத்துரைப்போரெல்லாம் மாறான காரியம் புரிவோரெனறு கருதது கொண்டு விட்டீர்: இந்த விபரீத எண்ணத்தின் விளைவுதான் பகை கொண்டு மட்டற்ற மகிழ்ச்சியுற எண்ணுகிறீர். வள்ளுவர் 'கொடுத்தும் கொளல வேண்டும் பகை' என்றாரேயொழிய, 'பகை கொண்டு மகிழ்ச்சி கொள்' என்று கூறவில்லை. சினம் தவிர்த்து சிந்தியுங்கள்" என்றார் புலவர்.

ஆத்திரத்தோடு குவளையார் "எவ்வளவு பொருள் செலவானலும் பரவாயில்லை. முதலில் உம் பகையை நான் பெற்றாக வேண்டும்" என்றார்.

**புலவரோ சிரித்துக் கொண்டே 'நீர் தேடிவைத்திருக்கும் பொருளே அழியாப் பகையை உங்குத் தேடித்தரும். கவலைப்படாதீர்' என்றுகூறிச்சென்றுவிட்டார்.**

---




---

## பிராந்திய கல்வி கல்லூரி

### மைசூர் - 570 006

**(Regional College of Education, MYSORE)**

கீழ்க்காணும் பதவிகளுக்கான விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன.

1. விரிவுரையாளர்கள் (Adhoc Appointments)

| | |
|---|---|
| (i) கல்வி | ஒரு பதவி |
| (ii) ரசாயனம் | மூன்று பதவிகள் |
| (iii) கணிதம் | இரண்டு பதவிகள் |

சம்பள விகிதம் : ரூ. 700-40-1100-50-1300-Assessment-50-1600 மற்றும் அலவன்ஸுகள்.

கல்வித் தகுதிகள் (அவசியமானவை) டாக்டரேட் பட்டம் அல்லது அதற்கு சமமான புத்தகம் பிரசுரித்த உயர்ந்ததகுதி (Standard மற்றும்நல்லஅகாடமிக் ரிக்கார்டுகளுடன் முதல் வகுப்பு அல்லது உயர்ந்தபட்ச இரண்டாம் வகுப்பு (B+) கொண்ட சம்பந்தப்பட்ட பாடத்தில் M.A. பட்டம் பெற்றவராகவோ அல்லது வெளிநாட்டு பல்கலைக் கழகத்தில் இதற்கு சமமான பட்டம் பெற்றவராகவோ இருக்க வேண்டும். அவசியம் என்று கருதப்பட்டால் டாக்டரேட் பட்டம் தளர்த்தப்படும்.

பதவி (i)க்கான பிரத்தியேக தகுதிகள் : மனோதத்துவ கல்வி, மற்றும் சமூகக் கல்வி- குழந்தைகள் மனோதத்துவம்- கல்வி நிர்வாக விஞ்ஞானம் - பிரத்தியேக கல்வி (உடல் ஊனமுற்றோருக்கான கல்வி) பாட நூல் திட்டம்- தொழிற்கலை கல்வி- தபால் மூலமான கல்வி.

பதவி (ii)க்கான பிரத்தியேக தகுதிகள்: ஆர்கானிக் ரசாயனம்-இன் ஆர்கானிக் ரசாயனம்-பிஸிகல்கெமிஸ்ட்ரி.

பதவி (iii க்கான பிரத்தியேக தகுதிகள் : அல்ஜீப்ரா- அனலிஸிஸ் - ஆபரேஷன்ஸ் ரீசர்ச்.

வயது வரம்பு: 1-12-1978 அன்று 35 வருடங்கள் கவுன்ஸிலில் பணியாற்றுபவர்களுக்கு வயது வரம்பு இல்லை.

குறிப்பு : 1978-79 ம் ஆண்டு கல்வி வருடம் முடியும் வரையிலோ அல்லது நிரந்தர ஆசிரியர்கள் வேலையில் சேரும்நாள் வரையிலே எதுமுன்னதாக நடைபெறுகிறதோ அதுவரை மேற்படிபதவிகளுக்கான நியமனங்கள் அட்ஹாக் முறையில் ஏற்படுத்தப்படும.

2. கிரேடு I ஆசிரியர் :

மிருக, தாவரக்கலை ஒரு பதவி (Temporary lien Vacancy) சம்பள விகிதம் ரூ. 550-25-750-EB-30-900 மற்றும் அலவன்ஸுகள் கல்வி தகுதிகள் அவசியமானவை i சம்பந்தப்பட்ட பாடதிட்டத்தில் M.A., பட்டம்பெற்று குறைந்தபட்சம் 45 சதவிகித மார்க் பெற்றிருக்கவேண்டும். ii பல்கலைக் கழக பட்டம்-கல்வி போதிப்பதில் டிப்ளமோ பட்டம். iii ஒரு அங்கீகரிக்கப்பட்ட பள்ளியில் மூன்று வருட கல்வி போதித்த அனுபவம்,கல்லூரி கவுன்ஸில் ஆகியவற்றில் குறைந்தபட்சம் ஐந்து வருடம் (Non-Teaching Employees) பணியாற்றியவர்களுக்கு தளர்த்தப்படும். முதல் வகுப்பில் M. A., பட்டம், அல்லது முதல்வகுப்பில் B. A. பட்டம் பெற்ற விண்ணப்பதாரர்கள் விஷயத்தில் (ii) & iii) ல் குறிப்பிட்ட முக்கிய கல்வி தகுதிகள் பொருந்தாது.

வயது வரம்பு : 1-12-78 அன்று 40வருடங்களுக்கு குறைவாக இருக்கவேண்டும். கவுன்ஸிலில் பணிபுரிபவர்களுக்கு வயது வரம்பு இல்லை.

3. கிரேடு II ஆசிரியர் :

மிருக தாவர இயல் (Biology)...ஒரு பதவி (தற்காலிக விடுமுறை பதவி) சம்பள விகிதம் : ரூ. 440-20-500-EB 25-700-EB-25-750 மற்றும் அலவன்ஸுகள்.

கல்வி தகுதிகள் : (தேவைப்படுவது) i இந்த பாடதிட்டத்தில் இரண்டாவது வகுப்பில் பட்டம் பெற்றிருக்கவேண்டும். (பட்டப்படிப்பு தேர்வில் 45 சதவீதம் மற்றும் அதற்குமேல் சரிசமமானதாக கருதப்படும். ii பல்கலைக் கழக பட்டம்- கல்வி போதனையில் டிப்ளோமா பட்டம் iii ஒரு அங்கீகரிக்கப்பட்ட பள்ளியில் இரண்டு வருடம் பாடபோதனை அனுபவம் சிறப்பான தகுதிகள் பெற்றுள்ள விண்ணப்பதாரர்கள் விஷயத்தில் தளர்த்தப்படும். முதல் வகுப்பு B. A. பட்டம் பெற்ற அல்லது M. A. பட்டம் பெற்று 55 சதவீகம் மார்க்குகள் பெற்ற விண்ணப்பதாரர்களுக்கு ii & iii ல் குறிப்பிட்டுள்ளது பொருந்தாது.

வயது வரம்பு : 1-12-1978 அன்று 35 வருடங்களுக்கு குறைவு. கவுன்ஸிலில் பணியாற்றுபவர்களுக்கு வயது வரம்பு இல்லை.

குறிப்பு ; நிரந்தரமாக வேலை செய்பவர்கள் மீண்டும் பதவியில் சேரும் தேதி வரையிலோ அல்லது 1978-79ம் கல்வி ஆண்டு முடியும் வரை எது முன்னதாக உள்ளதோ அதுவரை மேற்படி பதவிகள் தற்காலிகமான அடிப்படையில் நியமனம் செய்யப்படும். எனினும் 1978-79 ம் கல்வி ஆண்டு இறுதி வரை இந்த நியமனம் நீடிக்கும்.

4 Junior Project Fellows :

ERIC அங்கீகரிக்கப்பட்ட ஆராய்ச்சி திட்டத்தில் "Identification of The Areas of Deficiencies in Secondary School Physics Teachers and Finding Ways and Means to Helpthem" என பெயரிடப்பட்டுள்ள பௌதிக கல்வித் துறையில் இரண்டு பதவிகள். இந்ததிட்டத்தின் காலம் ஒரு வருடமாகும்.

சம்பளம் : ரூ. 400- (Consolidated)

கல்வி தகுதிகள் : பௌதிகத்தில் M.Sc. - M.Sc.- Ed பட்டப்படிப்பில் முதல்வகுப்பு அல்லதுஇரண்டாவதுவகுப்பு பெற்று பௌதிக கல்வியில் தனி ஆர்வமும், திறமையை நிரூபிக்கும் ஆற்றல்.

வயது வரம்பு : 1-12-78 அன்று 30 வருடங்களுக்கு குறைவாக இருக்கவேண்டும்.

பொதுவானவை : தாழ்த்தப்பட்ட- மலைஜாதி இனத்தவர்களுக்கு வயது வரம்பு தளர்த்தப்படும்.

இதர விவரங்கள் சமமானவை, தாழ்த்தப்பட்ட -மலைஜாதி இனத்தவர்களுக்கு முன்னுரிமை வழங்கப்படும்.

நேர்முகத் தேர்வுக்கு அழைக்கப்பட்டவர்களுக்கு TA-DA அளிக்கப்படமாட்டாது.

வெள்ளைத்தாளில், முழு விவரங்களடங்கிய விண்ணப்பங்களுடன், நற்சான்றிதழ் நகல்கள்- மார்க்கு கார்டுகள், ஆகியவைகள் இணைக்கப்பட்டு, கீழ்கையொப்பமிட்டவருக்கு இந்த விளம்பரம் வெளியிட்ட பத்து தினங்களுக்குள் வந்து சேரும்படி அனுப்பப்படவேண்டும். ஏற்கனவேவேலைசெய்து கொண்டு இருப்பவர்கள் தங்கள் விண்ணப்பத்தை தங்கள் அதிகாரிகள் மூலம்அனுப்பவேண்டும். விண்ணப்பதாரர்கள் உடனடியாக அலுவலில் சேர தயாராக இருக்கவேண்டும்

பிரின்ஸிபால்

davp 1008 (6) 78

---

## தபால் தந்தி இலாகா

### திருத்தம்

கீழ்க்காணும் வேலைகளுக்கான டெண்டர் பெற்றுக்கொள்வதற்கான தேதி 3-1-79 மாலை 3 மணி வரை நீடிக்கப்பட்டுள்ளது. 1. (சேலம் ஜில்லா) தலைவாசலில் தபால் அலுவலகம் & துணைபோஸ்ட் மாஸ்டருக்கான குடியிருப்பு ஆகியவை கட்டுதல் E. C ரூ.1,02,950-E.Mரூ.2,574-டெண்டர் பாரத்திற்கான கட்டணம்ரூ.31.30. 2 டெங்கனிக் கோட்டையில் தபால் அலுவலகம் & துணைபோஸ்ட் மாஸ்டருக்கான குடியிருப்பு ஆகியவை கட்டுதல் E.C ரூ. 1.41,462-டேவணி தொகை ரூ. 3,537-டெண்டர் பாரத்திற்கான கட்டணம் ரூ31-30 டெண்டர் பாரம் மற்றும் நிபந்தனைகள் ஆகியவை, இந்த அலுவலகத்திலிருந்து 6-1-79 வரை எல்லா அலுவலக நாட்களிலும் மாலை 3 மணி வரை பெற்றுக் கொள்ளலாம். டெண்டர்கள் அதே தினம் மாலை 3-30 மணிக்கு திறக்கப்படும்

Davp-710(1121)-78

## பால் பண்ணை மேம்பாட்டுத் துறை

### மறு ஏல விளம்பரம்

தமிழ்நாடுஅரசு மாதவரப் பால்பண்ணையிலுள்ள பழமரங்கள் (பனை, தென்னை நீங்கலாக)மா, பலா, முந்திரி மற்றும் கொய்யா போன்ற மரங்களின் கனிகளை 1979 ஆம் ஆண்டிற்கு (1-1-1979 முதல் 31 12-1979 வரை) அனுபவித்துக் கொள்ளும் உரிமையை 18-1-79 ஆம் தேதி காலை 11 00 மணி அளவில், பால் உற்பத்தி மற்றும் பால் பண்ணைமேம்பாட்டுத்துறை ஆணையாளர் அலுவலகம், மாதவரம் பால்பண்ணையில் பகிரங்கமாக மறுஏலம் விடப்படும்.

மேற்படி ஏலத்திற்கான விதிமுறைகளையும், விவரங்களையும் அறிந்து கொள்ள ரூ. 5. 21 [ரூபாய் அய்ந்து பைசா இருபத்தொன்று] பால்பண்ணை மேம்பாட்டுத் துறை அணையர் அலுவலகத்தில் செலுத்தி விதிமுறைகளைப் பெற்றுக்கொள்ளுமாறு இதன் மூலம் தெரிவிக்கப்படுகிறது.

ஆணையர்
மாதவரம் பால்பண்ணை.
சென்னை-51.

Dipr-239-794 FDS

## நீலகிரி மக்களிடையே

(முதல் பக்கத் தொடர்ச்சி)

ருக்கு முதல்வர் ஆணையிட்டார்.

"க்ரீன்பீல்டு" பகுதியில் கால்வாயையும் முதல்வர் பார்வையிட்டார் கால்வாயில் வெள்ளம் வராமல் தடுப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ளுமாறு முதல்வர் உத்தரவிட்டார்.

"க்ரீன் பீல்டு" பகுதியிலிருந்து முதல்வர்திரும்பி வருமபோது 5 ஆயிரத்திற்கும் மேற்பட்ட மக்கள் கூடிநின்று வரவேற்றனர். அவர்களிடம் நிவாரணப் பணிகள் குறித்து முதல்வர் கேட்டறிந்தார.

பேய்மழையால் பாதிக்கபட்ட "வச்" போர்டுக்கு சொந்தமான வீடுகளையும் முதல்வா பார்வையிட்டார

வெள்ள நிவாரணப்பணிகள் குறித்து அனைத்துக் கட்சித் தலைவர்களுடன் முதல்வர் புரட்சித்தலைவர் நேற்று இரவு ஏழுமணி முதல் எட்டரைமணி வரை ஒன்றரை மணிநேரம் ஆலோசனை நடத்தினா.

நேற்று காலை குன்னூர் பகுதியில் நிலச்சரிவால் பாதிக்கப்பட்ட பகுதிகளையும் மண்வள பாதுகாப்புத் திட்டங்களையும் முதல்வர் பார்வையிட்டார்.

### வரவேற்பு

"டாண்டீ" என்ற இடத்தில் இலங்கையில் இருந்து குடிபெயர்ந்து தேயிலைத் தோட்டங்களில் வேலைபார்க்கும் ஆயிரக்கணக்கான ஆண், பெண் தொழிலாளர்கள் கூடி நின்று புரட்சித்தலைவரை வரவேற்றனர்.

"கரன்சி" என்ற இடத்தில் சிறுமிகள் கூடி நின்று முதல்வரையும், அமைச்சா பி டி சரஸ்வதியையும் பாட்டுப்பாடி வரவேற்றனர். தேயிலைத்தோட்டப் பகுதியில் ஒரு மைல் தூரம் முதல்வர் நடந்து சென்று மக்களைச் சந்தித்தார்.

"டைகா ஹில்ஸ்" என்ற இடத்தில் லட்சக்கணக்கான ரூபாய் செலவில் தேயிலை தொழிற்சாலைக் கட்டிடம் கட்டப்படுகிறது அதை முதல்வர் பார்வையிட்டார்

இலங்கையிலிருந்து குடிபெயர்ந்து வந்துள்ள ஆயிரத்து ஐநூறு பேருக்கு இங்கு வேலை கொடுக்கப்படுகிறது.

"டைகர் ஹில் சில்" பெண்கள் முதல்வருக்கு திருஷ்டி சுற்றி, ஆரத்தி எடுத்து மாலையணிவித்து வரவேற்றனா,

ஜொசிபண்ணை, மாவட்ட கால்நடைப் பண்ணை ஆகியவற்றையும் முதல்வா பாா்வையிட்டாா். இரண்டு முறை வநத வெள்ளத்தால் மாவட்ட கால்நடைப் பண்ணை ஐந்தரைலட்சரூபாய் நஷ்டமடைந்து இருக்கிறது

முதல்வர் புரட்சித் தலைவர் சென்ற இடமெல்லாம் மக்கள் தங்கள் துயரங்களை மறந்து வரவேற்ற காட்சியும் முதல்வரின் தூயஅன்பும் கூடியிருந்த அனைவருக்கும் மெய்சிலிர்ப்பை உண்டாக்கியது

## பிரதமர் தமிழ்நாடு வருகிறர்

சென்னை, ஜன, 5- பிரதமர் மொரார்ஜி தேசாய் வருகிற 17ந் தேதி இரவு 9 மணிக்கு சென்னை வருகிறார்.

18ந்தேதி கும்பகோணத்தில் திருவாசகவிழாவிலும் சென்னை மறைமலை நகர் சாரணர் நிகழ்ச்சியிலும் கலந்து கொள்கிறார்.

## கலைமாமணி விருது

(முதலபக்கத் தொடர்ச்சி)

படுகின்றன.

எஸ், எஸ். வாசன். விளாத்திகுளம் சுவாமிகள். பல்லடம் சஞ்சீவிராவ் வயலின் கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை. முசிறி சுப்ரமணிய அய்யர், எம்பார் ஸ்ரீரங்காச்சாரியார், பெங்களூர் நாகரத்தினம்மாள், எட்டயபுரம் காசி விஸ்வநாத பாண்டியன். உடுமலை முத்துசாமி கவிராயர், ராஜா எம் ஆர் கோவிந்தசாமி, பி எஸ் வேலுநாயர், ஷேக் தம்பி பாவலர், காளி என் ரத்தினம், டி பி ராஜலட்சுமி.

மேற்கண்ட அறிவிப்பை இயல் இசை நாடக மன்ற செயலாளர் டி வி நாராயணசாமி வெளியிட்டார்.

## இந்திய அரசாங்கம்

### சென்ட்ரல் இன்ஸ்டிடியூட் ஆப் பிஷரீஸ், நாடிகல் & இன்ஜினீயரிங் டிரெயினிங்யூனிட், சென்னை-13

### தேவை

டூல் ரூம் அஸிஸ்டெண்ட்: மலைஜாதியினருக்காக ரிசர்வ் செய்யப்பட்டது. சம்பளம்: ரூ.260-6-326-EB-8-350 மற்றும் மத்திய அரசு விகிதத்தில் அலவன்ஸுகள் விதிகளுக்கேற்ப அளிக்கப்படும். வயது 25 வருடங்கள். மலைஜாதி வகுப்பினரைச் சார்ந்த விண்ணப்பதாரர்களுக்கு 5 வருடங்கள் வரை வயது வரம்பு தளர்த்தப்படும். கல்வித் தகுதிகள் & அனுபவம் : (1) மெட்ரிகுலேஷன் (2) ஒரு அங்கீகரிக்கப்பட்ட தொழிற்பயிற்சி நிலையத்தினரால் அளிக்கப்பட்ட பிட்டர் டிரேட் சர்டிபிகேட் (3) டூல்ஸ் மற்றும் மெஷினரி ஆகியவற்றை கையாள்வதில் ஒரு அங்கீகரிக்கப்பட்ட தொழிற்சாலையில் குறைந்தபட்சம் 3வருட அனுபவம் இந்த பதவி தற்காலிகமானதே எனினும் காலவரம்பின்றி நீடிக்கக்கூடும். தேர்ந்தெடுக்கப்பட்ட விண்ணப்பதாரர் சென்னையில் பதவியில் அமர்த்தப்படுவர், எனினும் இந்தியாவில் எங்கு வேண்டுமாயினும்மாற்றப்படுவர். மேற்கூறிய கல்வி தகுதிகள் மற்றும் அனுபவம் பெற்றுள்ள மலைஜாதி இனத்தை சார்ந்த விண்ணப்பதாரர்கள் தங்கள் விண்ணப்பங்களை, டெபுடி டைரக்டர், சென்ட்ரல் இன்ஸ்டிடியூட் ஆப் பிஷரீஸ், நாடிகல் & இன்ஜினீயரிங் டிரெயினிங்யூனிட், 81, எஸ்.என். செட்டிதெரு, ராயபுரம், சென்னை-600 013 அவர்களுக்கு ஒரு வெள்ளைத்தாளில் தங்களின் கல்வி தகுதிகள், அனுபவம், வயது முதலிய விவரங்களுடன் அனுப்ப வேண்டும். அரசாங்க இலாகா - நிறுவனங்கள் ஆகியவற்றில் பணிபுரியும் விண்ணப்பதாரர்கள் தங்கள் விண்ணப்பங்களை, தங்கள் மேலதிகாரிகள் மூலம் அனுப்பவேண்டும். பூர்த்தி செய்யப்பட்ட விண்ணப்பங்கள் பெற்றுக்கொள்வதற்கான இறுதி தேதி 31-1-1979.

davp - 539 (178) 78

## பாண்டிச்சேரி அரசாங்கம்

### பொதுப்பணித்துறை பாண்டிச்சேரி

இந்தியக் குடியரசுத் தலைவர் அவர்கள் சார்பில் கீழ்க்காணும் வேலைகளுக்கான முத்திரையிட்ட டெண்டர்கள் தகுதி வாய்ந்த காண்ட்ராக்டர்களிடமிருந்து, கீழ்க்கையொப்பமிட்டவரால் வரவேற்கப்படுகின்றது.

| வேலையின் பெயர் | உத்தேச மதிப்பீட்டு தொகை | டேவணித் தொகை டெபாஸிட் |
|---|---|---|
| புராணசிங்கபாளையம் I reach ல் உள்ள பம்பையாறு Causeway AT. R. C 21க்கு உடனடியான ஸ்பெஷல் ரிப்பேர்கள் செய்தல் | 36,800- | 920- |

டெண்டர்கள், நிர்வாகப் பொறியாளர் டிவிஷன் 3, பொதுப்பணித்துறை, பாண்டிச்சேரி அவர்களால், 19.1-79 பிற்பகல் 3-30 மணி வரை பெற்றுக்கொள்ளப்பட்டு அதே தினம் மாலை 4 மணிக்கு திறக்கப்படும், டெண்டர் பத்திரங்கள், ஒப்பந்த நிபந்தனைகள் ஆகியவை 17-1-1979 மாலை 5 மணிவரை, துணைப்பொறியாளர் அலுவலகம்,சாலைகள், P.W.D,பாண்டிச்சேரி, விலாசத்திலிருந்து ரூ 20+விற்பனைவரி (ரூபாய் இருபது மற்றும் விற்பனைவரி) சேர்த்து செலுத்தி பெற்றுக் கொள்ளலாம்.

டேவணித்தொகை டெபாஸிட் குறிப்பிட்ட முறையில் செலுத்தாமல் வரும் காண்ட்ராக்டர்களின் டெண்டர்கள் முழுவதுமாக நிராகரிக்கப்படும்.

எஸ் வி புருஷோத்தமன்
நிர்வாகப்பொறியாளர்,
டிவிஷன் எண் 3 P.W.D.
பாண்டிச்சேரி.

## தலைமைக் கழக அறிவிப்பு

### கோவை மாவட்ட கழகத் தோழர்களுக்கு

கழகத்தின் விதிமுறைகளுக்கும், கட்டுப்பாட்டுக்கும் மாறான முறையில நடந்துகொண்ட காரணத்திற்காக தாராபுரம் தொகுதி அமைப்பாளர் தளவாய் நாகராசன் மற்றும் தாராபுரம் தொகுதியைச் சேர்ந்த இராமமூர்த்தி ஆகிய இருவரும் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தின் அடிப்படை உறுப்பினர் பொறுப்பு உட்பட அனைத்துப் பொறுப்புக்களிலிருந்தும் உடனடியாக நீக்கப்படுகிறார்கள்.

கழகத் தோழர்கள் யாரும் மேற்படி இருவருடனும் எவ்விதத் தொடர்பும் கொள்ளவேண்டாம் என அறிவுறுத்தப்படுகிறார்கள்.

பொதுச் செயலாளர் (பொறுப்பு) டாக்டர் நாவலர் அவர்களின் ஒப்புதலுடன் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

கே. எ. கிருஷ்ணசாமி
அமைப்புச் செயலாளர்

சென்னை-14
4-1-1979

தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275 அவ்வை சண்முகம்சாலை சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவிந்திரனல் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர் பி. தங்கராஜன் நவசக்தி அச்சகம், கச்சேரி சாலை சென்னை 600004. ஆசிரியர்: எம்.ஜி.சக்ரபாணி

# அண்ணா வாரமலர்


## வாயை மூடு வேலை கிடைக்கும்

அமெரிக்காவில் உட்ஹெவன் பகுதியைச் சேர்ந்த அந்தோணி என்பவர், போர்டுமோட்டார் கம்பெனியில் ஒருவேலைக்கு மனுச் செய்திருந்தார். ஆனால் அவரது மனு நிராகரிக்கப்பட்டது. மறுநாள் அவர் ஒரு தந்திரம் செய்தார். அந்த ஆலையின் வாயிலுக்குச் சென்றார்.

வேலையில்லாதோருக்குக் கொடுக்கப்படும் அட்டையை வேலை பார்ப்பவருக்கு அளிக்கப்படும் நுழைவுச்சீட்டைப்போல வீசிக் காட்டிவிட்டு, ஆலையினுள் நுழைந்து அங்கே ஒரு பிரிவில் வேலை செய்யத் தொடங்கினார். மூன்று நாட்கள் அவர் நெற்றி வேர்வை நிலத்தில் விழ வேலைசெய்தார்; நான்காம் நாளன்று அவர் பிடிபட்டு வெளியேற்றப்பட்டார்.

"நான் நன்றாக வேலை செய்வதை அறிந்து அவர்கள் எனக்கு ஒரு வேலை கொடுப்பார்கள் என எண்ணினேன்" என்று அவர் கூறினார். அவர்வேலை செய்த நாட்களுக்கு அந்தக் கம்பெனி ஊதியம் கொடுத்தது.

வாயை மூடிக் கொண்டிருந்தால் உனக்கு வேலை தருவோம் என்றும் அது வாக்குறுதி அளித்தது. ஆனால்அந்தவாக்குறுதியை அது காப்பாற்றவில்லை.

★ ★ ★

## தலை தேவை

"எங்கள் வணிகத்திற்கு உங்கள் தலை தேவை" என்று அயர்லாந்தில் கில்டேர் என்னும் இடத்தி லுள்ள ஒரு சிகை அலங்கார நிலையத்தின் வாசலில் காணப்படும் அறிவிப்பு கூறுகிறது. அதன் வாசகம் சிறிது கொச்சையாக இருந்த போதிலும், அந்த விளம்பரத்திற்குப் பலன் இருக்கிறது.

---




பாஞ்சாலையுடன் இருந்த பழக்கம் தனக்கு இந்த ஆபத்தை ஏற்படுத்தியது என்ற முடிவுக்கு வையாபுரி வந்தான்.

பாவம் பாஞ்சாலை, தெரிந்தோ-தெரியாமலோ அவள் தன் அண்ணனிடம் தகவல் சொல்லப்போய் இந்த அளவுக்கு நிகழ்ச்சி நடந்துவிட்டது. இனி அவள் பழக்கத்தை முறித்துக் கொள்ள வேண்டியது தான் என்ற முடிவுக்கு வந்தான்.

மலைப்பகுதியில் எங்கே செல்வது?

முகாமை மாற்ற முடிவு செய்து அரூர்புறப்பட்டான்

மேச்சேரி பக்கம் இருந்து சில பேர் மாட்டு வண்டிகளில் சந்தைக்கு மூச்சிக் கிழங்கு ஏற்றிக்கொண்டு வந்தார்கள்.

நல்ல "கும்" இருட்டு. வண்டிக்காரர்கள், இரவு நேர ஆயாசத்தை மறக்க, பாடிக்கொண்டும், சுவாரஸ்யமாக பேசிக்கொண்டும் சென்றனர்.

நடை, உடை பாவனைகளை மாற்றிக் கொண்டு போலீஸ் கையில் மாட்டிக்கொள்ளாமல் வந்த வையாபுரி வண்டிக்காரர்கள் சிலரது குரலை அடையாளம் கண்டு கொண்டான்.

தன் ஊர்க்காரர்கள் என்றஹோதாவில் அவர்களிடம் பேச்சுக்கொடுத்து ஒரு வண்டியில் ஏறிக் கொண்டான்.

வண்டிக்காரர்களுக்கு ஏற்கெனவே தெரிந்த அவனது கதையை அவர்களிடம் வீராவேசமாகச் சொல்லிக் கொண்டு வந்தான்.

பழக்கப்பட்ட மாடுகள் வண்டியை இழுத்து வரும் என்ற தைரியத்தில் மற்ற வண்டிக்காரர்களும் இறங்கி வந்து வையாபுரி பக்கம் வந்துகதைகேட்டுக் கொண்டு வந்தனர்.

"வையாபுரித் தம்பி, இப்ப நீ போலீஸ் கையிலே இருந்து தப்பி வந்திருக்கே, நீ ரொம்ப சாக்கிரதையா யிருக்கணும். அருகுக்குப் போன பெறகு நெறைய தெரிஞ்சவங்க ஊட்லே தங்கிக்கனும் வெளியிலே கண்டா போயிடக் கூடாது" என்று ஒரு முதியவர் அவனுக்கு யோசனை சொன்னார்.

வையாபுரி தனது எதிரி என்று கருதும் குமார் அன்றைய தினம் அருகுக்கு வந்திருப்பதை மற்றொருவர் அவனிடம் தெரிவித்தார்.

"குமாரும் சந்தைக்கு வந்திருக்கான் நீ கருக்கா இருந்துக்கணும் அவன் உனக்கு ஆபத்து வந்தாலும் வரும்" என்று அவர் சொன்னார்.

வையாபுரி உள்ளத்துக்குள் மறைந்திருந்த மிருக உணர்வு வெறி கொண்டது.

"வந்திருக்கானா...எங்கே இருக்கிறான்?"... எப்போ வந்தான்?..."

-கேள்விகளை வையாபுரி அடுக்கினான்.

"நீ ஆத்திரத்திலே எதையும் பண்ணிடாதே. ஆபத்திலே முடியும் சந்தைக்குத் தான் எங்களுக்கு முன்னாலே பஸ்சிலே வந்து விட்டான்" என்று அவர் சொன்னார்.

வையாபுரி எச்சரிக்கையாக இருப்பதாக அவர் சொன்னதை தனது கொலை வெறிக்குத் தீனியாக அவன் மாற்றிக் கொண்டான்.

இருந்தாலும் ஒப்புக்காக "இல்லே அவன் இருக்கிற பக்கம் போகக்கூடாதுன்னு தான் கேட்டேன்" என்று சமாளித்தான் வையாபுரி.

அருகு எல்லைக்குள் வண்டி வந்ததும் இறங்கிக் கொண்டான் ஊரை ஒட்டி ஓடும் கால்வாய் வழியாக அவன் போய்விடுவதாக அவன் சொல்லிச் சென்றான்.

என்றாலும் அவனது எண்ணம் சந்தைப்பேட்டையைச் சுற்றியே வட்டமிட்டது.

மற்றொரு பக்கமாக வேகமாக சந்தைக் கடைக்குள் நுழைந்தான்.

விடிந்தும் விடியாத அந்தப் பொழுதில், சந்தைக்கு வரும் சரக்குகள் இறக்கும் வேலைகள் நடந்து கொண்டிருந்தன.

குமார் எங்கே தங்கியிருப்பான்? அவனது மாமன் கடைக்கு அவன் வருவான். அங்கு போய் பார்க்க முடிவு செய்தான்.

வையாபுரி போய்ச் சேர்ந்தபோது சுற்றிலும் கோணிப்பை தொங்க விட்டிருந்த கடைக்குள் குமார் தூங்கிக் கொண்டிருந்தான்.

அவனைப் பார்த்ததும், தன்தந்தையைக் கொன்ற கொலைகாரனில் அவனும் ஒருவன் என்ற ஆத்திர உணர்வு வையாபுரிக்குப் பொங்கி எழுந்தது. அவனை தட்டி எழுப்பி அதன்பிறகு தீர்த்துக் கட்டுவது என்ற முடிவுக்கு வந்தான்.

'டேய், குமாரு எழுந்திருடா' ஓங்கி அடித்தான் அவன்.

"தோ..இதான வாணும் காலங்கத்தால ராவடி பண்றியே..கொஞ்சம் கழிச்சு எழுந்துக்கறேன் மாமா" என்றான் குமார். தன் மாமன் வந்து அவனை எழுப்புவதாக அவன் நினைத்துக்கொண்டான்.

"ஊங்கும்...ரொம்ப அவசரம்...எழுந்திரு" என்று மீண்டும் ஒரு சாத்து சாத்திய பிறகு குமார், "அய்யோ இப்படி அடிக்கிறியே..நீயும் மாமனா?" என்றபடி எழுந்தான்.

கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தபோது எதிரே வையாபுரி நின்றிருந்தான் கனவில் நடப்பது போல் அவனுக்கு இருந்தது.

"நீ..நீ..." என்றுகுமார் உளறிக் கொண்டிருப்பதற்குள் பிச்சுவாக் கத்தியை எடுத்தான் வையாபுரி.

'நாந்தாண்டா இதோட போய்ச்சேரு' என்று வயிற்றில் குத்தினான். வெறித்தனமாக குத்திக் கொண்டே இருந்தான்.

அக்கம் பக்கத்தில் உள்ளவர்கள் விழிப்பதற்குள் அவன் ஓடியே போய்விட்டான்! குமார் அங்கேயே பிணமானான்.

● ● ●

அப்பாடா ஒருவழியாக சபதத்தை நிறைவேற்றியாகிவிட்டது என்ற பெருமூச்சுடன் வேகமாக நடை போட்டான்.

அரூரைத் தாண்டி கரிசல் காட்டு வழியாக வந்த போது வையாபுரியைப் பார்த்து நாய்கள் குரைத்தன வேகமாக நடையைப் போட்டான். சட்டை எல்லாம் ரத்தக்கறை.

சற்றுதொலைவில் சாலைக்குள் ஒரு வீடு தனித்து இருந்தது அவன் கண்ணில் பட்டது.

அங்கே போய் வேட்டி ஒன்றைத் திருடிக்கொண்டு உடை மாற்றிக் கொள்ள முடிவு செய்தான். வீட்டுப் பக்கம்போய் ஜன்னல் வழியாகப் பார்த்தான் துணிமணி ஏதும்இல்லை பின்புறமாகச் சென்றான். ஜன்னலை ஒட்டி ஒருவேட்டிதொங்கிக் கொண்டிருந்தது. லாகவமாக கைவிட்டு அதை எடுத்தபோது உள்ளே 'சிமினி' விளக்கு ஒளியில் ஒருத்தி உறங்கிக் கொண்டிருப்பது தெரிந்தது.

அவசர அவசரமாக உடைமாற்றிக்கொண்டான் மீண்டும் ஜன்னல் வழியாக உற்றுப்பார்த்தான்.

மண்ணெண்ணெய்விளக்கு ஒளியில் அவள் உடல் மஞ்சள் குளித்தது போல் இருந்தது.

ஓடிவிடுவதா? நின்று பார்ப்பதா? உடல் திமிர் எடுத்து சோம்பல் முறித்துக் கொண்டிருந்த போது அவள் இந்தண்டை திரும்பிப்படுத்தாள் பாயில் படுத்துக் கொண்டு போர்த்தி இருந்தாள். திரும்பிப் படுத்தபோது முந்தானை விலகி, அவனைப் பித்தனாக்கிவிட்டது.

வேறு யாரும் இருக்கிறார்களோஎன்று உற்றுப்பார்த்தான். அவளை அடுத்து சற்று தூரத்தில் வயதான ஒரு கிழவி அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தாள்.

அவள் அவளது மாமியாராக அல்லது தாயாக இருக்க வேண்டும் எப்படி இருந்தால் என்ன முயன்று பார்ப்போம் என்று ஒரு சிறிய கல்லை எடுத்து அவள் மீது போட்டான் அவள் கண் விழித்துப் பார்த்துவிட்டு எதுவும் புரியாதவளாக மீண்டும் படுத்துக் கொண்டாள்.

இவன் முயற்சியை விடவில்லை. மற்றொரு கல்லை எடுத்து அவள் மீது படும்படி போட்டான். அவள் விழித்துக் கொண்டு சுற்றுமுற்றும் பார்த்தபோது வையாபுரி தென்பட்டான் "ஆ" என்று அவள் வாயைத் திறப்பதற்குள் அவன் "உஷ்" என்று தன் வாயில் விரலை வைத்து, அப்பாவி போல் தலையை அசைத்தான்!

வையாபுரியைப் பார்த்தால் அவளுக்குத் திருடன் மாதிரித்தெரியவில்லை.

அப்படியே அவனைப் பார்த்தபடி இருந்தாள். லேசாகப் புன்னகைத்தவாறு வெளியே வரும்படி ஜாடை காட்டினான்.

அவளுக்குப் பயம் விடவில்லை விடிவதற்கு இன்னும் சிறிது நேரமே இருக்கிறது, அதற்குள் இப்படி ஒருவன் வந்தது அவளுக்கு அதிர்ச்சியையும் ஆச்சரியத்தையும் கொடுத்திருக்க வேண்டும்.

நிரபராதி காதலன் போலப் போதிபோல் தன் முகத்தை மாற்றிக் கொண்டு தனக்கே உரிய அனுபவத்தை பிரயோகித்தான், படுத்துக்கிடந்த கிழவிபக்கம் பார்வையைச் செலுத்தி விட்டு கதவைத் திறந்தாள்.

வையாபுரிக்குக் கவலை எல்லாம் பறந்து விட்டது. நெஞ்சம் நிறைய ஆசை துடித்துக் கொண்டிருக்க அவளை நெருங்கினான். மாட்டுக் கொட்டகைப் பக்கம் இருவரும் சென்றனர்.

(தொடரும்)

## மதகுருவால் மாண்ட குழந்தைகள்

"பீப்பில்ஸ் டெம்பிள்" என்னும் அமெரிக்க மதக் குழுவைச் சேர்ந்த 914 பேர் கயானாவிலுள்ள காட்டில் அண்மையில் படுகொலை செய்யப்பட்டதை உலகம் அறியும். இவர்களில் 180 பேர் குழந்தைகள். படுகொலைக்கு ஆளாகாமல் தப்பிய 78 பேர்இப்போது கயானா காடுகளில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளனர். தற்கொலை செய்ய விரும்பாதவர்களும் இக்குழுவில் பலர் இருந்தனர். அவர்களை ஒட்டுமொத்தமாக படுகொலை செய்யும் பணியில் ஈடுபட்ட குற்றத்துக்காக இரண்டு அமெரிக்கர்கள் இப்போது கைது செய்யப்பட்டுள்ளனர்.

## ஒரு ஆசாமிக்கு ஒரு வேளை சாப்பிட 185 ரூபாய்

ஆம்! இந்தியாவில்தான்! டெல்லியில் உள்ள ஓபராய் இன்டர் காண்டினெண்டல் ஓட்டல் உலகப் புகழ் பெற்றது! இந்த ஓட்டலில் 'தாஜ்' என்கிற சாப்பாட்டு விடுதி இருக்கின்றது!

இங்கு சூழ்நிலையே அலாதியானது. கண்ணாடி போன்ற வழவழப்பு! திரைச் சீலைகள்! அலங்காரங்கள்! மெல்லிய இசை! டணியாட்கள்!

இங்கு பகல் சாப்பாடு இருவர் சாப்பிட ரூ. 370 கட்டணம் ஆயிற்றாம்!

டெல்லியிலிருந்து வெளிவரும் நேஷனல்ஹெரால்டு தனது நிருபரை அனுப்பி சாப்பிடவைத்து சாப்பாட்டின் ருசி, கட்டணம் இவற்றை வெளியிட்டுள்ளது.

இருவர் சாப்பிடவும் சீமைச்சாராயம் அருந்தவும் டெல்லி ஓபராய் காண்டினெண்டல் ஓட்டலில் ரூ. 370 ஆயிற்றாம்!

அதாவது ஒரு ஆளுக்கு ஒரு வேளை சாப்பிட கட்டணம் ரூ. 185.

கோடிக்கணக்கான ஏழை மக்கள்ஒருவாய்உப்பில்லாக் கூழுக்கு வாடிக் கொண்டிருக்கிறபோது இப்படிப்பட்ட உல்லாசபுரிகளும் இருக்கத்தான் செய்கின்றன!

## கீதாகேப் என்று பெயர்வைக்க ராஜாஜி எதிர்ப்பு!

ஒருநாள் ராஜாஜி காரில் தியாகராயநகர், பாண்டி பஜார் வழியாக சென்று கொண்டிருந்தாராம்!

அப்போது கீதாகேப் என்ற பெயர்பலகை ராஜாஜியின் கண்களுக்குப்பட்டதாம்!

"கீதைக்கும் ஓட்டலுக்கும் என்ன சம்பந்தம்! அக்கிரமமாயிருக்கிறதே! இப்படியே போனால் உபநிஷத் லாண்டிரி, வேதம் சலூன் என்றெல்லாம் வந்துவிடும்" என்றாராம் ராஜாஜி.

கீதா என்பது ஏதாவது ஒருபெண்ணின் பெயராக இருக்கும்! அந்த நினைப்பில் ஓட்டல் அதிபர் அந்த பெயரை வைத்திருக்கலாம்! போர்க்களத்தில்அர்ச்சுனனுக்கு கண்ணன் உபதேசித்த கீதைதான் கீதா என்பது எத்தனை பேருக்குத் தெரியும்?



'இதயம் பேசுகிறது' வார இதழ் ஆண்டு நிறைவு விழாவில் முதல்வர் புரட்சித் தலைவருடன் பட அதிபர் ஏ வி மெய்யப்பன்

---




## ஆசை நெஞ்சம்

(முன் இதழ் தொடர்ச்சி)

"இல்லே... டாக்டர்.. இங்கேயே இருக்கட்டும். எவ்வளவு செலவானாலும் சரி அவளை எப்படியாவது குணப்படுத்தி விடுங்கள். ஒரு நல்ல நர்ஸாகப் போட்டு விடுங்கள் விஜயாவைக் கவனிப்பதற்கு!" என்றான். டாக்டர் கவனிப்பதாகச் சொல்லிவிட்டுப் போனார்.

குமார் தன்தாயை ஊரிலிருந்து உடனே வரும்படி கடிதம் எழுதிப் போட்டான் அவர்களும் மறுநாளே வந்து விட்டார்கள் விஜயா படுக்கையிலேயே தான் இருந்தாள் உடம்பு கூட சிறிது தேறிவந்தது. ஒருமாதமாக விடுமுறை பெற்று வீட்டிலேயே இருந்த குமார் இரண்டு நாட்களாகத்தான் அலுவலகம் செல்ல ஆரம்பித்திருந்தான்.

அன்று அலுவலகத்தில் இருந்தபோதுதான் அவனைத் துடிக்கச் செய்யும் அந்தச் செய்தி வந்தது. விஜயாவின் உடல்நிலை கவலைக்கிடமாக இருக்கிறதென்று அறிந்து கொண்டதும் பதறிப்போய் வீட்டிற்கு அவன் ஓடினான்.

அங்கே.

வீட்டில்-விஜயா தனது வாழ்வின் இறுதி விநாடிகளை எண்ணிக்கொண்டிருந்தாள்.

எப்பொழுதும் போல் வீட்டின் பின்புறம் சென்ற விஜயா கிணற்றடியில் வழுக்கி விழுந்ததன் விளைவாக கருச்சிதைவு ஏற்பட்டு, உயிரோடு போராடிக் கொண்டிருந்தாள்.

அருகில் சென்று கண்ணீர் மல்க "விஜயா" என்றான் குமார்.

அவள் தன் கண்களைத் திறந்து அவனை அருகில் அமரும்படி ஜாடை காட்டினாள். மூச்சு இழைந்து கொண்டிருந்தது. அதற்குள் செய்தியறிந்து எல்லோரும் வந்திருந்தனர்.

"அத்தான் எனக்குக் கடைசியாக ஒரேவொரு ஆசை; சொன்னால் செய்வீர்களா?" விஜயா திணறியபடி மெல்லக் கூறினாள்.

"விஜயா ஏன் இப்படியெல்லாம் பேசுகிறாய்?" உனக்கு ஒன்றுமில்லை நீ பேசக்கூடாதென்று டாக்டர் சொல்லுகிறார் கொஞ்சம் அமைதியாக இரு!

"இப்போது பேசாமல் இனிமேல் எப்போது பேசப் போகிறேன்? நான் இருக்கப்போவதே கொஞ்ச நேரம்! அதற்குள்ளாக என் ஒரே ஆசையைச் சொல்லி விடுகிறேன். என்னால் பேச முடியவில்லை. எனக்கு சமாதானம் சொல்லாமல்பதில் சொல்லுங்கள்! நிறைவேற்றி வைப்பீர்களா?"

"சொல்லு...விஜயா.. எப்போதாவது உன்வார்த்தையை மறுத்திருக்கிறேனா? அவசியம் நிறைவேற்றி வைக்கிறேன்."

"ஹா..ம்..இம்...எனக்கு இதுபோதும்! இதுவரைக்கும் உங்க கௌரவம்தான் என் கௌரவமென்று பிறந்த வீட்டையே மறந்திருந்தேன். இப்போது என் கௌரவம் உங்கள் சம்மதத்திலேதான் இருக்கிறது, நான் [illegible] பிறகும் நீங்கள் பழைய எண்ணத்திலேயே இருந்துவிடக்கூடாதென்றுதான் கடைசியாகச் சொல்கிறேன். உங்களுக்குத் தெரியாததல்ல. யாராக இருந்தாலும் பெண்ணுக்கு இறந்த பின்பு பிறந்தகத்துக் கோடிதான் உடம்பில் இருக்கும். உலக வழக்கமே இதுதான்! எந்தப் பெண்ணுக்கும் முதலிலும் முடிவிலும் பிறந்த வீட்டுத் துணிதான் உடலில் இருக்கும். எனக்கும் அந்தப் பாக்கியம் கிடைக்கும்படி செய்யுங்க. அதுதான் நமக்குக் கௌரவம். எல்லாப் பெண்களையும் போல நானும் கடைசியாகப் போய்ச்சேர அனுமதிங்க" அவள் தனது நிலைமையையும் மீறிப்பேசிவிட்டதினால் மூச்சு வாங்கியது.

"விஜயா" அவன் கதறினான்.

"அழாதீங்க... எனக்கு உங்க மேலே வருத்தமேயில்லை. ஆண்கள் யாரையும் எதிர்பாராமல்..ம்.. சுதந்திரமா.. வாழத்தான் விரும்புவாங்க அதுதான்.. ஆண்மை! ஆனால்.. நாங்க பெண்கள்.. சிலகாலம் பெற்றோர் தயவிலும் பிறகு கணவன் அரவணைப்பிலும் அதன்பின் பிள்ளைகள் ஆதரவிலும்-எங்கள்வாழ்க்கையே மற்றவர்களை சார்ந்துதான் இருக்க வேண்டியிருக்கிறது. இது பெண்மை!

எனக்கு...எந்தக்குறையுமில்லை. விரும்பியவரையே மணந்தேன். மஞ்சள்..குங்குமத்தோடு" அவளால் பேசுவதற்கு முடியவில்லை. மூச்சு தடம் மாறியது. கண்கள் மட்டும் சுற்றிலும் ஒருமுறை நோக்கின. மூச்சு ஒடுங்கிக் கொண்டே வந்தது.

சுற்றிலும் பார்த்த கண்கள் கடைசியாக குமாரின் கண்களை நோக்கின அவளது பார்வை அதன்பின் மாறவில்லை. அங்கேயே நிலைத்து விட்டது.

உயிரற்ற விஜயாவின் உடலைக் கட்டிக்கொண்டு குமார் கதறினான்-புரண்டான்-கண்ணீரால் அவளைக் குளிப்பாட்டினான்.

எல்லாம் இனிமேல் அழுவதற்கு ஒன்றுமே இல்லையென்பது போல் அழுது தீர்க்கனர். அவர்கள்வாழ்வில் புயல் வீசக் காரணமானவர்கள் கூட 'இச்' கொட்டி வருத்தம் தெரிவித்தனர். இதற்குமூலகாரணம் தாங்கள்தான் என்பதையும் சரியாகப் புரிந்துகொள்ளாமல் பொறுமையால் மற்றவர்களை எடைபோடுவதும், இகழ்வதும் பெரிய தவறு என்பதை அவர்கள் உணர்வார்களா?

உணர்ந்தால்தான் உலகம் உருப்பட்டுவிடுமே!

இதோ விஜயாவின் இறுதி யாத்திரை போகின்றது. அவளது ஆசைப்படி பிறந்தகத்துக் கோடிப்புடவை அவளது உடலைத் தழுவி அலங்கரிக்கிறது.

உயிரற்ற அந்த உடலில்-முகத்தில் ஒருவிதப் பொலிவு தனித்தெளிவு! உயிரும் உடலும் இணைந்து அனுபவிக்க முடியாவிட்டாலும் உடலாவது அனுபவிக்கும் என்ற நம்பிக்கை கலந்த நிம்மதியோடு இறுதி மூச்சை விட்டதினால் ஏற்பட்ட நிறைவோ!

## கடத்தல் பேர்வழியை பிடித்தகருவி

அமெரிக்காவில் தங்கி இருக்கும் டாக்டர் ஒருவர் சென்னைக்கு விமானத்தில் வந்தார்.

விமான நிலையத்தில் சோதனை அறைப்பகுதிக்கு அவர் சென்ற போது, அவர் கடத்திவந்தபொருள்களை அங்கிருந்த கருவி கண்டு பிடித்துக் கொடுத்தது.

அவரிடம் 5 காரட் வைரங்கள் கணக்குப் போடும் எலக்ட்ரானிக் கருவி, ரொக்கம் ரூ 30 ஆயிரம் ஆகியவை இருந்தன.

சர்வதேச விமான நிலைய சுங்க சோதனை பிரிவில், கருவிகளை வைத்து சோதனையை சுலபப்படுத்திய பின் சென்னையில் முதன் முதலில் ஒருவர் பிடிபட்டது இதுவே முதல்தடவை

பிளாக்குகள் செய்ய சிறந்த இடம்
லைன் ஆப்டோன் கலர்
குகா பிராசஸ்
☎ ....... 842606
No.19. நோன் சாகிப் தெரு, அண்ணாசாலை, சென்னை-2

# அண்ணா


எல்லோருக்கும் பொருள்
விஜய
புதிய
தவணைத் திட்டத்தில்
வி. ஜி. பன்னீர்தாஸ் & கோ.
சைதாப்பேட்டை - மவுண்ட் ரோடு - ரட்டன் பஜார் - தி. நகர்
விழுப்புரம் - வேலூர் - காஞ்சிபுரம் - அரக்கோணம் - செங்கல்பட்டு - ரெட் ஹில்ஸ்
திருவண்ணாமலை - வந்தவாசி - அந்தமான் - பம்பாய் - புது டில்லி - பெங்களூர்.

## பெண்களின் சுயவேலை வாய்ப்புகளுக்கான தொழில் அபிவிருத்தி பயிற்சிகள்

பெண்கள் தங்களின் சொந்தமான தொழிலைத் துவங்கி நடத்துவதற்கு உதவும் பொருட்டு, சென்னை சிறு தொழில்கள் சர்வீஸ் இன்ஸ்டிடியூட், 1979 பிப்ரவரி மாதம் முதல் சென்னையில் ஆறு வார காலத்திற்கு பயிற்சி வகுப்புகள் (பகுதி நேரம்) நடத்துவதற்கு முடிவு செய்துள்ளது. இந்த கோர்ஸுகளில் (a) உணவுப் பொருள்கள், பாதுகாப்பு, எலக்ட்ரிகல் மற்றும் எலக்ட்ரானிக்ஸ் - பகுதிகள்-பாகங்கள், ஸ்டேஷனரி மற்றும் இதர சாதாரண பொருள்களான போல்டர்கள், என்வலப்புகள், எழுதும் இங்க், பேக்கரி சாமான்கள், அனோடைஸிங், எலக்ட்ரோ பிளேட்டிங், ஸ்கிரீன் பிரிண்டிங், விஞ்ஞான கண்ணாடி சாமான்கள், போன்றவையும் (b) மானேஜ்மெண்ட்டுக்கான மார்க்கெட்டிங், காஸ்டிங், பைனான்ஷியல் அக்கவுண்டிங், ஸ்டோர் கீப்பிங், பிஸினஸ் கரஸ்பாண்டென்ஸ் ஆகியவையும் கற்றுக்கொடுக்கப்படும். இந்தக் கோர்ஸுகளில், a) சிறு தொழில்களின் அபிவிருத்தி திட்டங்களில் ஈடுபட்டுள்ள ஏஜன்ஸி நிறுவனங்கள் முக்கியமாக நிதி அளிக்கும் நிறுவனங்கள் b) அதுபோன்ற வாய்ப்புக்களை பயன்படுத்திக்கொள்வதற்கான நடைமுறை வழக்கங்கள் c) திட்ட மதிப்பீடு மற்றும் செயல்முறை ஆகியவை பற்றிய பாட திட்டங்களும் போதிக்கப்படும்.

சிறு தொழில் ஒன்றினை துவங்கி சுயவேலை வாய்ப்பை ஏற்படுத்திக் கொள்ள விரும்பும் பெண்கள் கீழ்காணும் விபரங்களடங்கிய தங்களின் விண்ணப்பங்களை அனுப்பி வைக்கலாம். 1. பெயர் மற்றும் விலாசம் 2. வயது 3. கல்வித்தகுதிகள் மற்றும் அனுபவம், மற்றும் தற்போதுள்ள வேலை அதன் விவரங்கள் 4. விருப்பமுள்ள தொழில் 5. இந்த கோர்ஸுகளில் விண்ணப்பதாரர்கள் தெரிவிக்க விரும்பும் இதர நெருங்கிய விவரங்கள் ஏதாவது இருப்பின் தெரிவிக்கலாம் இந்த கோர்ஸுகளில் சேருவதற்கான குறைந்தபட்ச கல்வி தகுதிகள் மெட்ரிகுலேஷன் தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும். எனினும் இதைவிட உயர்ந்த கல்வி தேர்ச்சி பெற்றவர்களுக்கு முதலிடம் அளிக்கப்படும், விண்ணப்பங்கள் டைரக்டர் ஸ்மால் இண்டஸ்ட்ரீஸ் சர்வீஸ் இன்ஸ்டிடியூட், 65-1, கிராண்ட் சதார்ன் டிரங்க்ரோடு கிண்டி சென்னை-600 032. அவர்களால் பெற்றுக் கொள்வதற்கான இறுதி தேதி 1979 ஜனவரி 30ம் தேதியாகும்.

davp - 563(138)-78

## நீங்களும் உங்களது மயூரமும் இணைந்து செயல்படும் நேரம் இதுவே!

உங்களது போக்குவரத்துப் பிரச்சனைகளை உணர்ந்து உழைப்பது மயூரம். வியப்பூட்டும் உல்லாசப் பயணத்துக்கு ஏற்றவாறு உருவாக்கப்பட்டது மயூரம். பின்பக்கம் மற்றொருவரையும் ஏற்றிச் செல்ல வசதியுண்டு. மயூரத்தில் மகிழ்ச்சியாக பயணம் செய்திட உற்ற தருணம் இதுவே! லிட்டர் ஒன்றுக்கு 70 கிலோ மீட்டர் இன்ப ஓட்டம். எழில் மிளிரும் இது உங்களது மயூரம் மோபெட்தான்! இன்றே வாங்கிடுவீர் இன்பப் பயணம் துவக்கிடுவீர்.

மயூரம்
தமிழ்நாடு மோபெட்ஸ் லிமிடெட்
(தமிழ்நாடு சிறுதொழில் நிறுவனத்தின் ஒரு சார்பு நிறுவனம்)
தொழிற்பேட்டை, கிண்டி, சென்னை-600 032.



டீலர்கள் இல்லாத இடங்களில் டீலர்கள் தேவை.

டீலர்கள் (தமிழ்நாடு) M-s. G. ஜான்ஷி & கம்பெனி (பி) லிட்., 813 அண்ணா சாலை, சென்னை - 600 002. M-s K. மாரப்பன், 17 மாரியம்மன் கோவில் தெரு, நாமக்கல்-637 001. M-s அழகப்பா ஏஜன்ஸீஸ், 146-A நேதாஜிரோடு, பொள்ளாச்சி-642 001 M-s பத்மா ஏஜன்ஸி, 71 வடக்கு வெளி வீதி, சிம்மக்கல், மதுரை-625 001. M-s சத்தியா ஆட்டோமோபைல்ஸ் 194 சுகவனேஸ்வரர் தேவஸ்தானம் கட்டிடம், சேலம்-1. M-s ஸ்ரீவத்ஸா என்டர்பிரைஸஸ், 18 மாநகராட்சி ஷாப்பிங் சென்டர், லா ஸி. பி. ராமசாமி அய்யர் ரோடு, சென்னை-600 018. M-s ரமேஷ் ஏஜன்ஸீஸ், 9-3 ஆரணி ரோடு, வேலூர். வ. ஆற்காடு மாவட்டம். M-s P. P. செல்வம் டிரான்ஸ்போர்ட், தலைமை அஞ்சல் நிலையம் அருகில், நாகர்கோவில். M-s S P மாணிக்கம், 238 நேதாஜி ரோடு, ஈரோடு-1. M-s தமிழ்நாடு ஆட்டோ சர்வீஸ், 14 மாக்டொனல்ட்ஸ் ரோடு, திருச்சிராப்பள்ளி-1. M-s நியூ இந்தியா ஆட்டோமோபைல்ஸ் 214-A சிவசாமி ரோடு, ராம் நகர், கோயமுத்தூர்-641 009. M-s ஸ்ரீ கோமதி கணேஷ் ஏஜன்ஸீஸ், 26-G6, சிவகாசி டாக்கீஸ் ரோடு, திருநெல்வேலி-627 001. M-s நேஷனல் ஏஜன்ஸீஸ் 13 B-2 ஸ்டிரிங்கையா ரோடு, டவுடன் கார்னர், வேப்பேரி, சென்னை-600 007. M-s ராஜலக்ஷ்மி ஏஜன்ஸீஸ், 46 வெள்ளப்பிறந்த முதலியார் தெரு, சிதம்பரம்-608 001, M-s குமரன் ஏஜன்ஸீஸ், ஜவான்ஸ் பவன், 7 வில்லியம்ஸ் ரோடு, திருச்சி 620 001. M-s பாபு ஏஜன்ஸீஸ், 55 பெரிய குளம் மேடு, திருப்பத்தூர் (வ. ஆ. மாவட்டம்). M-s வேல்முருகன் ஏஜன்ஸீஸ், கிருஷ்ண நிலையம், பெரிய கன்னாரத் தெரு, மாயவரம் (தஞ்சை மாவட்டம்).



வயாசர்பாடியிலுள்ள 'பியூட்டிடியூட்' சமூக நல அமைப்பின் சார்பில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்டவர்களுக்காக பால்பவுடர், பிஸ்கெட், மருந்துகளை அந்த நிறுவனத்தைச் சேர்ந்த பாபா முதல்வர் புரட்சித்தலைவரிடம் வழங்கினார் அமைச்சர்கள் காளிமுத்து, குழந்தைவேலு ஆகியோர் உடனிருந்தனர்.

## புரட்சித் தலைவருக்கு ஆசிரியர்கள் பாராட்டு

செய்யாறு, ஜன. 5- அனைத்திந்திய ஆசிரியர் சங்கத்தின் மாநிலப் பொதுக்குழு செய்யாறில் மாநிலத் தலைவர் ஆர். நரசிம்மன் தலைமையில் கூடியது.

தமிழக அரசின் துயர் துடைப்புப் பணிகளையும் முதல்வரின் துரித நடவடிக்கைகளுக்கும் பொதுக்குழு தனது பாராட்டைத் தெரிவித்துக் கொண்டது.

பொதுக்குழுவில் அரசு முன் வைத்திருந்த சில கோரிக்கைகளை, தமிழக அரசின் தற்போதைய சூழ்நிலையை உத்தேசித்து தள்ளி வைக்கப்பட்டதாக அறிவிக்கப்பட்டது.

## பீட்டர்ஸ் குடியிருப்பை செல்லையா பார்வையிட்டார்

சென்னை, ஜன. 5- பீட்டர்ஸ்சாலையில் உள்ள குடியிருப்புகளுக்கு சென்று வீட்டு வசதி வாரியத் தலைவர் ஏ. இ. செல்லையா நேற்று மாலை பார்வையிட்டார்.

குடியிருப்பில் இருந்தவர்களிடத்தில் ஏதேனும் குறைகள் இருக்கிறதா என்று கேட்டார்.

கொசுத் தொல்லை மற்றும் குறைகளைக் கேட்டு, அவைகளைப் போக்க நடவடிக்கை எடுக்கும்படி அருகிலிருந்த அதிகாரிகளிடம் உத்தரவிட்டார்.

வீட்டு வசதி வாரியத் தலைவர் செல்லையாவுடன் அதிகாரிகள் பலர் வந்திருந்தனர்.

## பொய்ச் செய்தி: திருவல்லிக்கேணி அமைப்பாளர் மறுப்பு

சென்னை, ஜன. 5- திருவல்லிக்கேணி தொகுதி ரோட்டரி நகர் பகுதியில் நடைபெற்ற தெருச் சண்டையை அரசியலாக்கி (2ந் தேதி) அலைஓசையில் வெளியிட்டுள்ள பொய்ச் செய்திக்கு கண்டனம் தெரிவித்து திருவல்லிக்கேணி தொகுதி அமைப்பாளர் மு. கிருஷ்ணன் மறுப்பு அறிக்கை விடுத்துள்ளார்.

அந்த பத்திரிகை செய்தியில் வெளியிடப்பட்டுள்ள பச்சை, மூர்த்தி, மணி, தோணிமணி உட்பட பத்துபேர்களுக்கும் நமது இயக்கத்திற்கும் சம்பந்தமில்லை. அவர்கள் கழகத்தவரும் அல்ல, உள் தகராறை தெருச் சண்டையை அரசியலாக்குமுனை வது மிகவும் வெட்கக்கேடான செயல் என்றும் கிருஷ்ணன் கூறியுள்ளார்.

### வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட

## விவசாயிகளுக்கு தலா ரூ500 உதவி: அமைச்சர் காளிமுத்து வழங்கினார்

சிவகாசி, ஜன. 5 அமைச்சர் காளிமுத்து வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட விவசாயிகளுக்கு தலா ரூ 500 உதவிப்பணம் வழங்கினார்.

சிவகாசி அருகே வெள்ளப்பெருக்கால் பாதிக்கப்பட்டோரை உள்ளாட்சித் துறை அமைச்சர் காளிமுத்து சந்தித்து ஆறுதல் கூறினார்.

பாதிக்கப்பட்ட அனைத்துக் குடும்பங்களுக்கும் நாளொன்றுக்கு தலா 10 கிலோ அரிசி வீதம் 7 நாட்களுக்கு 70 கிலோ அரிசிதர அமைச்சர் கா. காளிமுத்து உத்தரவிட்டார்.

அமைச்சர் காளிமுத்து சிவகாசிக்குச் சென்றார். அவருடன் ராமநாதபுரம் நாடாளுமன்ற உறுப்பினர் பொ. அன்பழகன், சட்டமன்ற உறுப்பினர்கள் சுந்தரராஜன், கே. கே. எஸ். எஸ் ஆர். ராமச்சந்திரன், ஆர். கே. பெருமாள், மற்றும் கா. பொன்னுப்பாண்டியன், வி. எஸ். பஞ்சவர்ணம் ஆகியோர் சென்றார்கள்.

அமைச்சர் சிவகாசிக்கு செல்லும் வழியில் அழகாபுரி என்ற ஊரில் ஏராளமான கிராம மக்கள் அவரைச் சந்தித்தனர் சமீபத்தில் ஏற்பட்ட மழை, வெள்ளத்தால் தங்கள் வீடுகள் பெருமளவு பாதிக்கப்பட்டதாக முறையிட்டனர்.

அவர்களுக்கு வேண்டிய உதவிகளை உடனடியாகச் செய்யுமாறு அமைச்சர் காளிமுத்து உத்தரவிட்டார்.

### 70 கிலோ அரிசி

பல உயிர்களை பலி கொண்ட அர்ஜுனா ஆற்றிற்கும் அமைச்சர் வந்தார்.

மரத்தடியில் அமைச்சர் காளிமுத்து உட்கார்ந்து உயிர் பிழைத்த சிறுவர்களிடம் சம்பவம் பற்றி பரிவுடன் விசாரித்தார்.

பாதிக்கப்பட்டோரின் துயரத்தைக் கேட்ட அமைச்சர், எல்லாக் குடும்பங்களுக்கும் நாளொன்றுக்கு 10 கிலோ அரிசி வீதம் 7 நாட்களுக்குத் தர உத்தரவிட்டார்.

கன்னுசேரி புதூர் என்ற ஊரில் வெள்ளம் பாதித்த 54 வீடுகளை அமைச்சர் காளிமுத்து பார்வையிட்டார்.

ஆவடையாபுரம், பட்டப்புதூர் ஆகிய ஊர்களில் மழை, வெள்ளத்தால் வெற்றிலைக் கொடிக்கால் வாழைத்தோட்டம் பாதித்த விவசாயிகளுக்கு தலா ரூ. 500 மானியமாக அமைச்சர் வழங்கினார்.

இங்கு நடைபெற்ற நிகழ்ச்சிகளுக்கு மாவட்ட ஆட்சித்தலைவர் சா சுப்பிரமணியம் தலைமை தாங்கினார்.

அமைச்சர் கா காளி முத்து, பொ அன்பழகன் எம். பி சுந்தரராசன் எம். எல். ஏ. ஆகியோர் பேசினார்கள்.

"பல குரல் இசைமணி"
நாகூர் அனிபா, ஜேசுதாஸ், A. M. ராஜா
இவர்களின் குரலில் பாடும்
திருச்சி ராஜன், ஜெயா
கலைக்குழு வழங்கும்
"விடாத பிடி"
என்னும் நகைச்சுவையான கலாநிகழ்ச்சி
அணுகவும்:
திருச்சி ராஜன்
ஒகளூர்-621108
லப்பைகுடிகாடு (வழி)
திருச்சி மாவட்டம்.

### கடலூர் நகராட்சி

## டெண்டர் நோட்டீஸ்

கடலூர் நகராட்சி மஞ்சை நகர் மைதானத்தின் பேச்சு மேடைக்கு சப்மீட்டர் வைத்து இணைப்பு அமைக்கும் வேலைக்கு மூடி முத்திரையிட்ட ஒப்பந்தப்புள்ளிகள் 17-1-79 அன்று மாலை 4.00 மணி வரை நகராட்சி ஆணையர் அவர்களால் பெற்றுக்கொள்ளப்படும். இவ்வேலைக்குரிய டெண்டர் ஷெட்யூல் ரூ. 5 வீதம் இந்நகராட்சி கருவூலத்தில் செலுத்தி 16-1-79 மாலை 4.00 மணிவரை பெற்றுக்கொள்ளலாம். இதர விபரங்களுக்கு நகராட்சி பொறியர் அவர்களை அணுகவும்.

நகராட்சி அலுவலகம், கடலூர். (ஒம்) சி. ம. குமரேசன், ஆணையர், கடலூர், நகராட்சி.

நாள்: 30-12-1978.

### ஏல விளம்பர நோட்டீஸ்

உத்திரமேரூர் ஊராட்சி ஒன்றிய அலுவலகம் அருகில் நிறுத்தி வைக்கப்பட்டுள்ள ஜீப் டி. எம். சி. 5102 காஞ்சிபுரம் கோட்ட வளர்ச்சி அலுவலர் அவர்களால் 27-1-79ம் தேதி காலை 11-30 மணி அளவில் உத்திரமேரூர் ஊராட்சி ஒன்றிய அலுவலகத்தில் பொது ஏலத்தில் விடப்படும். மேற்படி ஜீப்பை உத்திரமேரூர் ஊராட்சி ஒன்றிய ஆணையர் அவர்கள் அனுமதியுடன் அலுவலக வேலை நாட்களில் பார்வையிடலாம். பொது ஏலத்தில் பங்கு கொள்ள விருப்புவோர் ஏல நிபந்தனைகளை காஞ்சிபுரம் கோட்ட வளர்ச்சி அலுவலர் அலுவலகத்தில் அலுவலக நாட்களில் பெற்றுக்கொள்ளலாம்.

(ஒ-ம்)
கோட்ட வளர்ச்சி அலுவலர்
காஞ்சிபுரம்
இடம்: காஞ்சிபுரம்
நாள்: 26-12-78

DIPR: 34822-78-3

## படித்து விட்டீர்களா?



"கீதா"
(சினிமா, அரசியல் மாதமிருமுறை)
ஆசிரியர்: திருவையாறு பி. சி. பழனியாண்டி

புரட்சித்தலைவர், பொன்மனச்செம்மல் முதல்வர் எம். ஜி. ஆர். அவர்களின் ஆசியோடு சுவையான அரசியல் சினிமா செய்திகளோடு, 'கீதா' மாதமிருமுறை வெளிவருகிறாள்.

விற்பனையாளர்கள் தொடர்புகொள்க
"கீதா"
57-19, V. K. ஐயர் சாலை,
மந்தைவெளி,
சென்னை-28




## அது அவருக்கு பாங்க் ஆஃப் பரோடாவின் கிராம விகாஸ் கேந்திராவிலிருந்து கிடைத்தது

ग्राम विकास केन्द्र

இன்று, இந்தியா முழுவதுமுள்ள ஆயிரக் கணக்கான கிராமிய மக்கள், தங்கள் கனவுகளை நனவாக்கிக் கொண்டிருக்கிறார்கள்—பாங்க் ஆஃப் பரோடாவிலிருந்து கிடைத்த உதவியின் மூலமாக.

பாங்க் ஆஃப் பரோடாவினால் நிறுவப்பட்ட கிராம விகாஸ் கேந்திரங்கள் இப்பொழுது எல்லா கிராம நலத் திட்டங்களுக்கும் பெரிய அளவில் உதவியை அளித்து வருகின்றன, நமது கிராமங்களின் முழுமையான பொருளாதார வளர்ச்சிக்கு உதவியாகுமாறு எளிய கிராம முன்னேற்ற நிலையங்களாக, அவைகள் நமது மக்களின் வருமானத்தை மேம்படுத்தவும் வெற்றிகரமாக உதவி வருகின்றன.

பாங்க் ஆஃப் பரோடா தனது பலவித பணிகளின் வழியாக நமது கிராமங்களின் வளப்பெருக்கத்திற்கு உதவுவதன் மூலம் கிராமிய இந்தியாவின் தோற்றத்தையே மாற்றி வருகிறது. அதன் பலவித உதவித் திட்ட வரிசைகள் வாயிலாக:

- சுலபமான விதிமுறைகளின் பேரில் தாராளமான கடன் வசதிகள்.
- எளிதான வழிமுறைகள்.
- தொழில்துறை ஆலோசனைப் பணிகளுக்காக விசேஷ பயிற்சியளிக்கப்பட்ட அலுவலர்கள்.
- இல்லங்களுக்கே வந்து தவணைகளை பெற்றுச் செல்லும் வசதி.
- விவசாயம் மற்றும் அதைச் சார்ந்த தொழில்கள், கைவினை தொழில்கள், குடிசைத் தொழில்கள், சொந்தத் தொழில் புரிவோர் மற்றும் வங்கியினால் உதவக்கூடிய எல்லாத் திட்டங்களுக்கும் உதவி.

பாங்க் ஆஃப் பரோடா
இந்திய அரசு நிறுவனம்

வளர்ச்சியே நல்வாழ்வின் முன்னோடி.

இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் - பெல்ஜியம், பிஜித் தீவுகள், கயானா, மொரிஷஸ், செய்ச்செல்ஸ், சுல்தானேட் ஆஃப் ஓமன், யுனைடெட் ஆரப் எமிரேட்ஸ், இங்கிலாந்து ஆகிய நாடுகளில்—1300க்கு மேற்பட்ட கிளைகளால் பிணைக்கப்பட்டுள்ளது.

Imageads-BOB-1163M